# நூல் விபரம்

## ஆரையம்பதி கண்ணகை | வரலாறும் பாடல்களும்


| | | |
|---|---|---|
| தொகுப்பு | : | க. சபாரெத்தினம்<br>சொ.பிரசாத் |
| முதற்பதிப்பு | : | மாசி 2017 |
| பதிப்புரிமை | : | மறுகா, ஆரையம்பதி |
| அச்சுப் பதிப்பு | : | நியூ செலக்சன், அக்கரைப்பற்று. |
| அட்டைப்படம் | : | சொ.பிரசாத் |
| கணனி தட்டச்சு | : | பா.வேந்திரராஜா |
| கடதாசி | : | 70 gsm |
| நூற்பிரதி | : | 500 |
| பக்கங்கள் | : | 106 + X |
| விலை | : | 300/- |

# பொருளடக்கம்

## வாழ்த்துரை

தமிழ் இலக்கிய வரலாற்றில் சங்க இலக்கியம் ஊடாக அறியப்பட்டு நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரத்தில் தெய்வத்தன்மை கொண்ட பக்தினியாக முன்னிலைப்படுத்தப்பட்ட கண்ணகி வழிபாடு, இலங்கையில் தாய்த் தெய்வ வழிபாட்டோடு இணைந்த வகையில் மிகவும் தொன்மையானது. தொன்மையும் மேன்மையும் மிக்க கண்ணகி வழிபாட்டின் பல்வேறு பரிமாணங்களையும் பரிநாமங்களையும் தன்னகத்தே கொண்ட ஆலயம் கிழக்கிலங்கையின் ஆரையம்பதி கண்ணகி கோவில் ஆகும். இக்கோவிலை மையமாக வைத்து வெளியீடு செய்யப்படுகின்ற வரலாறும் பாடல்களும் கொண்டமைந்த "ஆரையூர் கண்ணகை" என்ற நூலுக்கு வாழ்த்துரை வழங்குவதில் பெருமகிழ்ச்சியடைகின்றேன்.

மக்களது வாழ்வியல் மற்றும் சடங்குகளோடு தொடர்புபட்ட வழிபாடு ஆகமம்சாரா வழிபாடு ஆகும். மரபுரீதியான கதைகள் வழக்காறுகள் ஐதீகங்கள் என்பவற்றின் அடிப்படையிலே நடைபெறும் சடங்குகள் பூசைகளே இவ்வாலயங்களின் சிறப்பம்சமாகும். கிராமங்களிலே கண்ணகித் தெய்வம் ஒவ்வொருவருக்கும் குடும்பத்தின் தாயாகவும், சேயாகவும், தெய்வமாகவும் ஒன்றித்திருப்பதை அனுபவரீதியாக உணர்ந்தவர்கள் நம்மவர்கள்.

இத்தகைய பத்தினித் தெய்வம் பற்றிய கதையோடு, ஆரையம்பதியின் சமய, சமூக, பொருளாதார, வரலாற்று ஆதாரங்களையும் பதிவு செய்து ஆரையம்பதி கண்ணகியின் அருள்மாட்சி, அற்புதங்கள் மற்றும் அமைவிடம் ஆகியவற்றையும் சிறப்பித்து பாடல்களோடு உருப்பெற்ற "ஆரையூர் கண்ணகை" என்ற நூல் ஒரு சிறந்த வரலாற்று நூலாக அமையும் என்பது நம்பிக்கையாகும்.

அவ்வகையிலே க. சபாரெத்தினம் அவர்களுக்கும் வெளியீடு செய்கின்ற மறுகா வெளியீட்டிற்கும் இவ் நூல் வெளிவருவதற்கு உழைத்த சொ.பிரசாத் அவர்களுக்கும் எனது மனமாரந்த வாழ்த்துக்களையும் பராட்டுக்களையும் தெரிவித்துக் கொள்கின்றேன்.

அ. உமாமகேஸ்வரன்
பணிப்பாளர்
இந்துசமய கலாசார
அலுவல்கள் திணைக்களம்
கொழும்பு

# அணிந்துரை

ஈழத்தில் கண்ணகி கலாசாரத்தில் முக்கிய இடமாக வரலாற்றில் முக்கியம் பெற்ற ஆரையம்பதி கண்ணகி கோயில் பற்றிய இந்த நூல் நமக்கு பல புதிய சேதிகளை சொல்கிறது. நாம் அறியயாத ஐதீகங்களும் மரபுக் கதைகளும்,தொன்ம வரைபுகளும் இங்கு முக்கியம் பெறுகின்றன.

ஈழத்தில் கண்ணகி வழிபாடு பல்லாயிரம் வருச பழமை கொண்டது. கஜபாகு மன்னன் சேரன் செங்கூட்டுவன் நடத்திய பத்தினி விழாவில் பெற்றுக் கொண்ட கண்ணகி சிலை மூலம் கண்ணகி வழிபாடு ஈழத்தில் சங்கமன் கண்டி மூலம் பரவியதாக கதைகள் சொல்லப்படுகின்றன. தமிழ் மக்கள் மத்தியிலும் சிங்கள மக்கள் மத்தியிலும் கண்ணகி நெருக்கமான மக்கள் தெய்வமாக போற்றப்படும் மரபு காணப்படுகிறது.

தமிழில் கண்ணகி பற்றிய முதல் செய்தி சங்க இலக்கியமான நற்றிணையில் ஒரு முலை திருகிய திருமாவுன்னி என இலக்கிய ஆதாரமாய் நம் முன் வருகிறது. ஈழத்தில் குறிப்பாக கிழக்கு மாகாணத்தில் எப்போ இந்த கண்ணகி கலாசார மரபு உருவானது என்று கால வரையறை கணிக்க முடியாத அளவுக்கு ஒவ்வொரு பிரதேசத்திலும் ஒவ்வொரு கதை கூறப் படுகிறது. கணநாத் ஒபயசேகரா தம்பிலுவில் கண்ணகையையே முதன்மைப் படுத்துகிறார். ஆனாலும் ஒவ்வொரு இடத்து கண்ணகை கோயில் வரலாறு பற்றி பார்க்கும் போது தங்கள் கோயிலின் பழமையை வலியுறுத்துகின்றனர்.

ஈழத்தில் கண்ணகி வழிபாட்டின் அறிமுகம் மிகத் தொன்மை என்பதை ஈழ நிலத்தின் தொன்மையோடு தொடர்புபட்டது. தமிழகமும் ஈழமும் ஒரு காலத்தில் ஒரே நிலத்தால் இணைக்கப்பட்டிருந்தது பெரும் கடல் கோள் ஒன்றினால் நிலங்கள் பிரிக்கப்பட வாழ் நிலத்தில் இருந்த பண்பாடு வழிபாடு கதைகள் என்பனவும் அந்த நிலப்பிரிப்போடு ஈழ நிலத்தில் தங்கி விட கண்ணகி இங்கு முக்கியப்பட்டிருக்கலாம்.

ஆரையம்பதி கண்ணகி வழிபாட்டின் தொன்மையை தம்பி பிரசாத் சொக்கலிங்கம் இந்த நூலின் மூலம் நிறுவியிருக்கின்றார், சில கர்ண

பரம்பரை கதைகள் மற்றும் இலக்கியங்கள் மூலமும் வழிபாட்டு முறைகளில் உள்ள மக்கள் மானிடவியல் கூறுகளின் அடிப்படையிலும் தன் கருத்துக்களை முன் வைக்கிறார். இந்த நூலின் மூலம் ஆரையம்பதி கண்ணகை வெறுமனே பக்தி சார்ந்தது மட்டுமல்ல ஒரு குறிப்பிட்ட ஒரு குலமரபின் வரலாறும் கூட என்பது நிருபணமாகிறது.

மீகாமன் பற்றி இந்த நூல் தரும் தகவல்கள் மட்டக்களப்பு வரலாறு பற்றிய புதிய சேதிகளை தருகிறது. மட்டக்களப்பு வரலாறு மீகாமன் பெறும் முக்கியத்துவத்தை இந்த நூல் தருகிறது. மீகாமன் என்ற சொல்லாடல் ஒரு தனிமனிதன் பற்றியதல்ல அது ஒரு சமூகம் பற்றியது.

கண்ணகி குளிர்த்தி பாடல் "மீகாமனுக்கு மிகுந்த வரம் கொடுத்து நாகமணி வாங்கவென்று நயந்தாய் குளிர்ந்தருள்வாய்" என்ற வரிகள் கண்ணகி வழிபாட்டில் மீகாம வம்சத்தினரின் முக்கியத்துவம் வெளிப்படுகிறது.

கண்ணகி வழிபாடு பற்றிய ஆய்வுகள் இன்று முனைப்புப் பெற்றுள்ள காலம் இதுவெனலாம். இலங்கையில் கண்ணகிக் வழிபாடு பற்றி பேராசிரியர் கணநாத் ஒபயசேகரா அவர்கள் எழுதிய "pathni cult" என்கிற ஆய்வு நூல் கண்ணகி வழிபாடு என்பதைத் தாண்டி கண்ணகி கலாசார மரபுகள் பற்றி நிறையவே செய்திகளை தருகிறது. பேராசிரியர் மௌனகுரு, மகேஸ்வரலிங்கம் ஆகியோர் எழுதிய கட்டுரைகள் வெல்லவூர்கோபாலின் கட்டுரைகள், எனது ஈழத்தில் கண்ணகி கலாசாரம் எனும் நூல். கடந்த பல வருடங்களாக மட்டக்களப்பில் நடை பேறும் கண்ணகி விழாவில் ஆய்வரங்குகளில் வாசிக்கப் பட்ட கட்டுரைகள். விழா மலர்களில் இடம்பெற்ற பலரது கட்டுரைகள். செட்டிபாளையம் கண்ணகி பற்றி வெளி வந்த நூல் என்பனவும் முனாக்கனா அவர்களது கண்ணகி வழிபாடு பற்றிய கட்டுரைகள் இன்னும் பலரது ஆய்வு முயற்சிகள் கிழக்கு மாகாணத்தில் கண்ணகி கலாசாரம் பற்றிய பல செய்திகளையும் அதன் வலிமையயையும் நமக்கு தெளிவுபடுத்துகின்றன.

இந்த நூலில் ஆரையம்பதி கண்ணகி பற்றியும் அதன் வரலாறு ஐதீகங்கள் நம்பிக்கைகள் ஒரு கலசார பரம்பரியத்தின் தொடர்ச்சி அதில் ஆரையம்பதியின் முக்கியத்துவம் குலம் சார்ந்த மரபுகள் இன்று வரை அதை பேணி வருகின்ற முறைமைகள் பற்றியெல்லாம் நிறைய செய்திகளை

தருகிறார். தமிழியல் ஆய்வுகள் தனியே பல்கலைக் கழகங்களுக்கும் பல்கலைக் கழக ஆய்வு முறைமைகளுக்கு மாத்திரம் சொந்தமல்ல மக்கள் சார்ந்த ஆய்வுகளும் இன்று உலகளாவிய அளவில் முக்கியம் பெறுகின்றன ஆய்வு மதிப்பீடுகள் மாறியுள்ளன. தம்பி பிரசாத் சொக்கலிங்கம் புதிய ஆய்வு களங்களை திறந்து விட்டுள்ளார் என்றே நான் சொல்லுவேன்.

கிழக்கு மாகாணத்தின் வரலாற்றில் மிக சாதுரியமாக முக்கியத்துவம் மறைக்கப் பட்ட குருகுலம், வர்ணகுலம் மீகாமன் பரம்பரை பற்றிய செய்திகளையும் மட்டக்களப்பில் இவர்களது வரலாற்று முக்கியத்துவம் என்ன என்பதற்கான வழிகளையும் இங்கு திறந்து விட்டுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும். மட்டக்களப்பின் வரலாறு முழுமையாக எழுதப் படுகிற போது ஆரையம்பதி கண்ணகி பற்றிய ஐதீகங்களும், நம்பிக்கைகளும் மிகமுக்கியமாக கவனத்தில் கொள்ளப் படவேண்டும் என்பதை இந்த நூல் வெளிப்படுத்துகிறது.

*பாலசுகுமார்*
*முன்னாள் பீடாதிபதி*
*கலை கலாசார பீடம்*
*கிழக்குப்பல்கலைக்கழகம*

# வெளியீட்டுரை

இந்தவெளியீட்டுரையை எழுத முயன்றபோது அறிஞர் டயோனிசியஸ் கூறியதுதான் என் ஞாபகத்திற்கு வந்தது “உண்மைச் சான்றுகளிலிருந்து பெறப்படும் தத்துவம்தான் வரலாறு” என்கிறார். வரலாறு உண்மை நிகழ்வுகளின் அடிப்படையில் இருக்க வேண்டும். அந் நிகழ்வுகளால் வெளிப்படுத்துபவை தவறானதாக இருக்கக்கூடாது. ஆனால் சில வரலாற்று ஆய்வாளர்கள் வரலாறுகளை புரிதலின்றி, வரலாற்று ஆய்வு முறையை அறிந்திராது தங்கள் அறிவுப் போதாமையைப் பறைசாற்றி பதிவாகின்றமையை காண்கின்றோம்.

எனினும் ஆரையூர் கண்ணகை உண்மையை நோக்கிய தேடலின் விளைவு ஆய்வுமுறையலன்றி பெரும் ஆய்வொன்றிற்கான தொடக்கப்புள்ளியாகப் பர்ணமித்துள்ளது. மாற்றுப் பிரதிகளின் பொய்மைகளைக் கட்டுடைத்து ஒரு ஊரின் அடையாளத்தை நிலை நிறுத்தியுள்ளது. அந்தவகையில் இந்த முயற்சி பாராட்டத்தக்கது.

இலக்கியப் பிரதிகளை ஆவணப்படுத்தும் “மறுகா” முதல்தடவையாக வரலாற்றுப் பிரதியொன்றை வெளியிடுவது முதல் முயற்சியாகும். இந்நூலின் வருகைக்கு உந்துசக்தியாக சொ.பிரசாத் செயல்படாவிட்டிருந்தால் இது சாத்தியமாகியிருக்காது. முதல் வரைவிலிருந்து இறுதி வரைவுவரை அவரின் செயலூக்கம் என்னை இப்பதிப்பை மேற்கொள்வதற்கு ஆர்வத்தைத் தந்தது.

எப்படியிருப்பினும் ஆய்வு முறைகளும், வரலாற்றைத் தேடலும் இன்றைய ஆய்வியலில் புதிய தடங்களைக் கடந்து செல்கின்ற காலம். அந்தக் காலப் பயணிப்பில் இந்நூல் ஆரையம்பதியின் மூடிய கதவுகளைத் திறந்திருக்கின்றன. வரலாற்றை அறிந்திடாமல் பொதுப்புத்தியில் பொய்மைகளை கட்டமைப்பவர்களுக்கு பாடம் புகட்டியிருக்கின்றது.

த. மலர்ச்செல்வன்
மறுகா பதிப்பகம்,
ஆரையம்பதி.

# அறிமுகம்

இந்து மதம் விசாலமான கிளைகளையும் பரந்த வேர்த்தொகுதியையும் உள்ளடக்கியதானதொரு பெரு விருட்சம் போன்றது. இதன் முற்றுமுழுதான போதனை, சகல உயிர்களையும் சமமாக வழிநடத்துவதும் அவை பரிபூரணானந்த சோதி மயமான இறைவனோடு இரண்டறக் கலந்து பிறப்பென்னும் பெரும் பிணியினின்றும் நிரந்தர விடுதலையைப் பெற்றுக்கொள்வதற்கான வழிகாட்டலுமே ஆகும். இதற்காகவே அது வேதங்கள், உபநிடதங்கள், ஆகமங்கள், ஸ்மிருதிகள், தேவார பாராயண தோத்திர பிரபந்தங்கள், திவ்விய பிரபந்தங்கள் என்பவற்றை உள்ளடக்கியதொரு சன்மார்க்க நெறியாகச் செயற்பட்டு வருகின்றது. ஆயினும் அது தன்னைப் பின்பற்றி அனுஸ்டான நெறிமுறைகளில் ஈடுபட்டுள்ள எவரையும் தன்னிடமிருந்து பிரிந்து செல்லாதவாறானதொரு செயன்முறையையோ, கட்டுப்பாடுகள் எவற்றையயுமோ விதித்திருக்கவில்லை. இதனால் தான் இந்துமதம் கிரேதாயுகம், திரேதாயுகம், துவாபரயுகம் என்ற மூன்று யுகப் பிரளயங்களையும் கடந்து தற்போது கலியுகத்தில்தானும் புதிது புதிதாகத் தோற்றம் பெற்றுவரும் வழிபாட்டு நெறிமுறைகளையும் அது அங்கீகரிக்கத் தவறவில்லை. இந்த வகையில்தான் பல ஞானிகள் இப்பூவுலகில் தோன்றி அவ்வப்போது நிலைபெற்றுள்ள சூழ்நிலைகளுக்கேற்ப பக்தி மார்க்கங்களை அவரவருக்கே உரித்தான பாணியில் முன்னெடுத்து வந்துள்ளனர்.

இந்த வகையில் கௌதம புத்தர், சங்காராச்சாரியார், ராமானுஜர், இராமகிருஸ்ண பரம'ம்சர் மற்றும் இவர்கள் போன்ற இன்னும் பல ஞானிகள் இந்துமதத்தின் அடிப்படைக் கோட்பாடுகளுக்குப் பங்கமேற்படாத வகையில் பக்தி நெறியினை வளர்த்தெடுக்க அனுமதிக்கப்பட்டனர்.

இதுபோக, இன்னும் சிலர் பிறவியிலேயே தெய்வீகக் கரு உருவாகப்பெற்றவர்களாக இப்பூவுலகிலே மனிதப் பிறவியை அடைந்து அவர்களின் தியாக மனப்பாங்கினாலும் சீரிய வாழ்க்கை நெறி அமைப்பு மூலமாகவும் மனித குலத்திற்கு வழிகாட்டிகளாகத் திகழ்ந்து தெய்வீக அந்தஸ்த்தினைப் பெற்றுக்கொண்டனர். இந்த வரிசையில் மதுரைவீரன், கருப்பண்ணசாமி, ஐயனார் போன்ற வீர மரபுத் தெய்வங்களைக் கூறலாம்.

காவியம் புகழும் கற்புக்கரசி கண்ணகையும் இதிகாச வகைப் பிரிவின் வழிவந்த சீதாராமனும், மகாபாரத திரோபதையும் கூட தெய்வீக அவதாரங்களே! இந்த ஒவ்வொரு அமானுஸ்யக் கதாபாத்திரத்திலும் உண்மை, நீதி, அறம், அன்பு, இரக்கம், கற்பு என்ற பண்புகளோடு தெய்வீக சக்தியும் நிரம்பப் பெற்றுள்ளமையே இதற்குக் காரணமெனலாம்.

## கண்ணகை வழிபாடு

கி.பி 2ம் நூற்றாண்டில் சேரன் செங்குட்டுவன் அழைப்பின் பேரில் இலங்கை கஜபாகு மன்னன் ஓர் அதிதியாக கலந்து கொண்டான். இலங்கைக்கு மீண்ட போது அங்கிருந்து கண்ணகை சிலையையும் காற்சிலம்பினையும் கொண்டு வந்து முதன் முதலில் அவன் கரை தட்டிய இடமான கந்தரோடைக்கு அருகில் அங்காணாமைக் கடவை என்னும் ஊரில் கண்ணகைக்கான கோயிலைக் கட்டினான். அதைத் தொடர்ந்து அனுராதபுரம் கண்டியாகிய நகரங்களுக்கும் பரவச் செய்தான் என்ற வரலாறு பல நூலாசிரியர்களின் ஆக்கங்களில் இருந்து தெரிய வருகிறது.

கஜபாகு மன்னனால் அறிமுகம் செய்து வைக்கப்ட்ட கண்ணகை வழிபாடும் அதன் வரலாறும் இளங்கோ அடிகளாரால் அருளிச் செய்யப்பட்ட சிலப்பதிகாரக் காப்பியத்தின் அடிச்சுவட்டைப் பின் பற்றியே எழுந்திருந்த போதிலும் மட்டக்களப்பு தேசத்தில் உள்ள சில கண்ணகையம்மன் ஆலயங்களில் படிக்கப்பட்டு வரும் காவியங்களில் பேசப்படும் வரலாற்று விபரங்கள் மாறுபட்டவையாகக் காணப்படுகின்றன.

அடிப்படை அம்சங்களில் இவை ஒத்துப்போனாலும் சில முக்கிய நடைமுறை விபரங்களில் அவை சற்று வேறுபட்டனவாகவும் இந்துமதக் கோட்பாடுகளுக்கும் அனுஸ்டான விதிமுறைகளுக்கும் இசைந்தவையாவும் அமைந்துள்ளமை வெளிப்படை. இளங்கோ அடிகளின் சிலப்பதிகாரம் ஒரு சமண சமயக் காவியம் என்பதானாலோ இத்தகைய அற்ப சொற்ப வேறுபாடுகள் பரவலாக புகுத்தப்பட்டுள்ளன.

## கண்ணகையின் முற்பிறப்பு பற்றிய கதைகள்

கண்ணகை ஒரு அவதாரப் பிறவி என்பதை எந்தக் கோணத்தில் இருந்தும் ஆய்வினை மேற்கொள்ளும் எவராலும் மறுத்துரைக்க முடியாது. இதனால்

தானோ என்னவோ இம்மாதரசியின் பிறப்புக் குறித்து இருவேறுபட்ட ஐதீகக் கதைகள் இடம்பெறுகின்றன.

**மாங்கனிக் கதை**

பராசர முனிவரின் மகளாக ஒரு காலத்தில் தேவலோகத்தில் பிறந்த நாகமங்கலை அறிவு, கருணை, அன்பு, வனப்பு மிகைப்பட்டவளாக சிவபெருமான் மீது அளவிலா அன்பு பூண்டு வாழ்ந்து வந்த காலை ஒரு நாள் சிவபெருமான் அவளை நோக்கி " நீ பூவுலகத்தில் மானிடப் பெண்ணாக அவதரித்து கற்பு நெறியினை விளங்கச் செய்வதோடு மானிட வர்க்கத்தினரால் வணங்கப்படும் தெய்வ அந்தஸ்த்து பெற்றவளுமாவாய்" என்று திருவாய் மலர்ந்தருளினார்.

அதன் பிரகாரமே நாகமங்கலை ஒரு மாங்கனியாக வடிவம்கொண்டு பாண்டிய நாட்டில் உருவெடுத்தனள் இதற்கு ஒரு காரணம் உண்டாம். பாண்டியன் மாறன் தற்பெருமையும் அகம்பாவமும் கொண்டவனாம். இவன் தன் தவவலிமையினால். சிவபெருமானைப் போன்று நெற்றியில் மற்றொரு கண்ணோடு முக்கண்ணனாக வாழ்ந்து வந்தானாம். உமையின் வேண்டுகோளிற்கு இணங்கவே பராசர முனிவரின் மகள் மாங்கனியாக உருவெடுத்து அரசனின் அம்பினால் அம் மாங்கனி வீழ்த்த முற்பட்ட சமயம் அது அறுந்து பூமியில் விழாமல் அந்தரத்தில் தொங்கியதாம். அதனை எட்டிப் பிடித்த அரசனின் கைகளை தீப்பொறியாகி சுட்டெரித்து விட்டதாம். அக்கினிச் சுவாலையின் தாக்கம் தாங்காத அரசன் கைகளை உதறி முகத்தில் தடவிக்கொண்ட போது அவனது மூன்றாவது கண் அவ் அக்கினியில் வெந்து சாம்பராகிவிட்டதாம். இக்கதை இவ்வாறுதான் விரிந்து செல்கிறது.

அம்மாங்கனியை அரசன் எடுத்து வந்து பட்டத்து ராணியிடம் கொடுத்து ஒரு குடத்தில் இட்டு வைக்குமாறு பணித்தான். மூன்றாம் நாள் எடுத்துப் பார்த்தபோது அங்கே ஒரு அதிசயம் காணப்பட்டதாம். மாங்கனி இருந்த இடத்தில் ஒரு அழகிய பெண் குழந்தை விளையாடிக் கொண்டிருந்ததாம். ஆஸ்தான சோதிடர்களின் "பீடுறும் மதுரை அரசோடழியக் காரணமாகும்" என்ற அறிவுறுத்தல்களுக்கிணங்க அரசனுக்கும் பாண்டிய நாட்டுக்கும் அக்குழந்தையால் பேராபத்து விளையுமெனத் தெளிந்த மன்னன் அழகிய பேழை ஒன்றில் குழந்தையைப் பக்குவமாக வைத்து கடலில் மிதக்க விட்டான்.

சோழ நாட்டில் காவிரிப்பூம் பட்டினத்தில் வாழ்ந்து வந்த மாசாத்துவன், மாநாய்கன் என்ற பெரும் வணிகர்கள் வசம் வந்து சேர்ந்த அப்பேழையை முன்னர் அவரவர்களிக்கிடையே ஏற்படுத்திக் கொள்ளப்பட்ட ஒப்பந்தப்படி முதலில் கண்டவர் என்ற பேரில் பேழை மாசாத்துவனுக்கும் உள்ளே அடங்கியிருந்த பொருளான குழந்தை மாநாய்கனுக்கும் சமரசமாக பிரித்தெடுக்கப்பட்டது. இக்குழந்தையே நமது அரும் பெரும் அற்புதத் தெய்வமான கண்ணகை நல்லாள் என்று ஒரு ஐதீகக் கதை உரைக்கிறது.

இந்த வரலாற்றுக் கதை தவிர மற்றுமொரு கதையும் ஆரையம்பதியில் எமது முன்னோரால் பரவலாக பேசப்பட்டதொன்று. இதனை எந்தவொரு காவியமோ எழுத்தாளனோ இதுவரை வெளியிடாமல் விட்ட போதிலும், இக்கதையில் பொதிந்து கிடக்கும் கருப்பொருள் கண்ணகையின் பூவுலக பிரவேசத்திற்கு அத்திவாரமிட்டது போல் அமைந்துள்ளதாக தெரிகின்றது. அக்கதை இதுதான்.

**எண்ணெய் வாணிபர் கதை**

முன்னொரு பொழுது இந்தியாவின் ஏதோ ஒரு பிரிவில் ஒரு ஏழைத்தாயும் தனயனும் வாழந்து வந்தனராம். அவர்கள் தங்கள் சீவனோபாயத்திற்காக தேங்காய் எண்ணெய் வியாபாரம் செய்து வந்தனராம் அவர்கள் தினமும் ஊரூராய்ச் சென்று எண்ணெய்யை விற்றுக் கிடைக்கும் ஊதியத்தில்தான் செலவு செய்து வந்தனராம். ஒரு நாள் தங்கள் வியாபாரம் சோர்வடைந்த நிலையில் ஒரு மரநிழலில் அனாயசமாக ஆறி இருந்த போது எதிரே இருந்த காளிகோயில் அவர்களது பார்வைக்குத் தென்பட்டதாம். மானசீகமாக எழுந்து சென்று அம்மனை மனதார வழிபட்டு “இன்றைக்கு சரக்குகள் முழுதாக விற்றுவிட்டால் தாயே உன் ஆலயத்தில் ஆயிரம தீபங்கள் ஏற்றுவோம்” என்று நேர்த்தி வைத்தனராம்

என்ன அதிசயம் ! சூரியன் மறைவதற்கு முன்பே அத்தனையும் விற்றுத் தீர்ந்து விட்டனவாம். நேர்த்தியின் வண்ணம் தாயும் சேயும் பயபக்தியோடு ஆயிரம் தீபமேற்றி தம் நன்றியை தெரிவித்தனராம். இதற்கிடையே பலகாலமாக பாழாலக் கிடந்த இக் கோயிலில் பிரகாசமாக எரிந்த ஆயிரம் விளக்குகளால் அதிசயத்துப் போன மக்கள் அரசனுக்கு தகவல் தெரிவிக்க அவனும்

ஆத்திரமடைந்து ஒற்றர் மூலம் இனங்கண்டு அத்தாயையும் மகனையும் சிரச்சேதம் செய்து கொன்று விட்டனராம்.

குறித்த அந்த அரசன் முன்பு ஒருநாளில் வேட்டையாடக் காட்டுக்குப் புறப்பட்டுச் சென்ற போது அங்கே வேட்டை எதுவும் கிடைக்காமல் சோர்வுடன் திரும்பியவேளை வழியில் குதிரை அங்கும் இங்கும் அலைக்கழித்து காளிகோயில் எதிரே அவனை உதறித் தள்ளிவிட்டதாம். வெட்கம் ஒருபுறம் வேதனை மறுபுறம் சீரழிக்க சீற்றத்துடன் குதிரையைக் கொன்றுவிட்டதோடல்லாமல் அக்காளிகோயிலிலே எவரும் பூசை புனஸ்காரம் செய்யக் கூடாதென்றும் தீபமேற்றி வழிபடக்கூடாதென்றும் கண்டிப்பான கட்டளையைப் பிறப்பித்தானாம். இதுவே எண்ணெய் வாணிபர்கள் இருவரும் சிரச் சேதம் செய்யப்பட்டதற்கான மூல காரணம் .

இதன் பின்னணியில்தான் எண்ணெய் வாணிவிச்சியாகிய அத் தாய் மறுபிறப்பில் காளியம்மனின் அருளால் கண்ணகைத் தெய்வமாகவும் மகன், செல்வமும் செழிப்பும் பெற்ற வாணிகன் கோவலனாகவும், தண்டனையை அழித்த கொடுங்கோலரசன் அதிமர்த்த பாண்டியமாறனாகவும், அரசனுக்கு தகவல் சொன்ன பிரசைகள் பாண்டிய நாட்டின் மக்களாகவும் பிறப்பெடுத்து ஊழின் வினைப்பயனைப் பெற்று ஓய்ந்தனர் என்றும் எண்ணிப் பார்ப்பதற்கு இக்கதையில் அதிக கருப்பொருள் உண்டென உணரலாம். அதுமட்டுமல்ல, அந்த மன்னன்தான் முன் ஜன்மத்தில் மதுராவின் சக்கரவர்த்தியாக இருந்து பல கொடுமைகளைச் செய்த கம்சனோ என்று எண்ணவும் தோன்றுகின்றது. காரணம், ஆரையம்பதி கண்ணகையம்மன் சடங்கு ஆரம்பிப்பதற்கு முன்பாக இங்கு விஸ்ணு ஆலயத்தில் கும்பம் வைத்து கம்சன் வதையும் அதற்கான அன்னதானமும் இடம்பெற்ற பின்னரே அம்மன் சடங்குகள் ஆரம்பமாகும் என்பதும் கவனத்தில் கொள்ளப்பட வேண்டிய விடயமாகும்.

**கண்ணகை வரலாற்றில் மீகாமனின் வகிபாகம்**

கிழக்கிலங்கையில் கண்ணகை வரலாறு பற்றி பல அறிஞர்கள் கட்டுரை எழுதியும் ஆய்வு மேற்கொண்டும் நூல்களை வெளியிட்டும் உள்ளனர். எனினும் கண்ணகை வரலாற்றோடு தொடர்புபட்ட ஒரு முக்கிய நபர் பற்றியோ அவர் குறித்த வகிபாகம் தொடர்பாகவோ அதிகம்

பேசப்படவில்லை! அதாவது கண்ணகையின் மணவாழ்க்கையானது சம்பந்தப்பட்ட பெரியோர்களால் நிச்சயிக்கப்பட்ட போது அந்த நிகழ்ச்சியை முழுமைப்படுத்தத் தேவையான அணிகலன்கள் பல தயாரிக்கப்பட்டன. அவற்றுள் காற்சிலம்பு அதிமுக்கியத்துவம் பெற்றது. அக்காற்சிலம்பினுள் பதிப்பதற்கு நாகமணியே அவர்களால் தேர்ந்தெடுக்கபட்டது. ஆயினும் அத்தகைய அரிய மணியைப் பெற்றுக்கொள்வதில்தான் சிரமம் நிறைந்திருந்தது. தென்திசையின் கண்ணே சோழ நாட்டிற்கு வெகு தூரத்திற்கு அப்பால் இருக்கும் தீவொன்றில்தான் அவ்வகை இரத்தினத்தைப் பெற்றுக்கொள்ள முடியும் என்று பொற்கொல்லர்கள் கூறினார்கள்.

மீகாமன் ஒரு சிறந்த கப்பலோட்டி. அதுமட்டடுமல்ல வீரமும் விவேகமும் உண்மை நேர்மை என்பனவும் நிறையப்பெற்ற மிகுந்த பலசாலி. பொற்கொல்லரின் வார்த்தையைக் கேட்ட மாநாய்கன் அவ் இளைஞனுக்கு தூதனுப்பி அவனது உதவியைக் கேட்டுக்கொண்டான். அதுமட்டுமல்ல, கடற்பயணத்திற்கான அனைத்து ஏற்பாடுகளையும் முறையாகச் செய்து போதுமான அளவு போர் வீரர்களையும் தெரிவு செய்து அனுப்பி வைத்தான். மீகாமன் என்ற சொல்லுக்கு தமிழில் கப்பலோட்டி அல்லது மாலுமி என்பதே பொருள் ஆயினும் மாலுமியான இவனது இயற்பெயரும் மீகாமன் என்பதாகவே நாம் கருதவேண்டியுள்ளது. ஆயினும் ஒரு பழம்பாடலில் இவனது பெயர் சௌந்திரியன் எனக் குறிப்பிடப்பட்டுள்ளமையும் நோக்கத்தக்கது.

குறித்த அந்த நாகமணித் தீவை மூன்று அரசர்கள் ஆட்சி செய்து வந்தனர். அவர்கள் மூவரும் ஒரே தாய்பெற்ற சகோதரர்கள். அவர்களில் மூத்தோனான வெடியரசனை போரில் வென்று சிறைபிடித்தபோது அவனது தம்பி வீரநாரணன் மீகாமனை எதிர்த்தான். போரில் வீரநாரணன் கொல்லப்பட்டதும் அடுத்த தம்பியான விளங்குதேவன் யுத்தத்திற்கு தயாரானான். இவன் முன்னைய இருவரையும் விட வீரத்தில் சிறந்தவனாக இருந்ததினால் போர் வலுப்பெற்றது. இறுதியில் மீகாமன் விளங்குதேவனையும் தோற்கடித்தே நாகமணிகளை அங்கிருந்து எடுத்து வந்து கண்ணகையின் காற்சிலம்பு செய்வதற்காக கையளித்தான் என்ற வரலாற்றை சிலர் மாற்றி அமைத்து மீகாமன் சிறைப்பிடிக்கப்பட்ட பின்னர் இரந்து நிற்க பரிதாபப்பட்டு நாகமணிகளை விளங்குதேவன் கொடுத்துதவினான் என்று

திரிவுபடுத்தியுள்ளனர். இக் கூற்று யதார்த்தத்திற்கு முரணானது. உடன்பிறந்த சகோதரர்களில் ஒருவனைச் சிறைப்பிடித்தம் மற்றொருவனை கொன்றும் போர்புரிந்த பகைவனான மீகாமனை சிறைப்பிடித்த பின்பு அவன் இரங்கியதற்காக யாவற்றையும் மன்னித்து வழியனுப்பி வைத்தான் என்று கூறுவதில் ஏதோ ஒரு இடத்தில் தவறு உண்டு என்பது மட்டும் நிஜம்

வெடியரசன், வீரநாரணன், விளங்குதேவன் என்றழைக்கப்பட்ட மூன்று முக்குக அரசர்களின் ஆட்சியின் கீழிருந்த இரத்தினத் தீவை முற்றுகையிட்டு போர்புரிந்து நாகமணியை பெற்றுக் கொண்டதாக வரலாறு இருக்கத்தக்கதாக கண்ணகை தொடர்பான நூல்களில் இந்நிகழ்ச்சிக்கு முக்கியத்துவம் கொடுக்கப்படாதது ஒரு திட்டமிட்ட விடுபாடென்றே எண்ணத்தோன்றுகின்றது.

கண்ணகை காவியம் முழுக்க முழுக்க சிலம்பு என்ற அணிகலனை மையமாக வைத்தே உருவாக்கப்பட்டதொன்று. கண்ணகை தன் காலில் அணிந்திருந்த சிலம்புதான் ஊழ்வினைப் பயனை நடாத்துவதற்கான கருப்பொருளாக அமைந்து தொடக்கம் முதல் இறுதிவரை நின்று நிலைத்திருக்கும் ஒரு கருவியாக செயற்பட்டு வருவதை சிலப்பதிகாரம் தெளிவிக்கிறது. சிலம்பு + அதிகாரம் = சிலப்பதிகாரம் என்ற விளக்கத்தில் இருந்து கூட இதன் முக்கியத்துவத்தை அறிந்துகொள்ளலாம் பெறற்கரிய நாகமணியை தனது விடாமுயற்சியால் வென்று கொணர்ந்த மீகாமனைப் பாராட்டி அவனைப் பலரும் கௌரவித்தனராம். இச்சமயம் கண்ணகை தேவி மனம் மிக மகிழ்ந்து மீகாமனைப் பார்த்து இந்தச் சாதனை புரிந்தமைக்காக உனக்கும் உன்னைச் சார்ந்த சமூகத்திற்கும் வரிசைகள் பத்தொன்பதாக உயர்த்தப்படுகின்றது. என்று திருவாய்மலர்ந்தருளியதாகவும் கர்ணபரம்பரைக் கதை ஒன்று உள்ளது. இது தொடர்பான பாடலின் வரிகளையும் இங்கே இடம்பெறச் செய்கின்றேன்.

"கொச்சி கொல்லம் மலையாளம்
கூடலூர் குருநாடு தேசம்
எல்லாம் சென்றுமே புகழ்பெற்ற
தீசகனாம் சௌந்திரீகன்
மாநாகன் மகளுக்கு
மரகதமணி ஈர்ந்தவனாம்
வரிசை பத்தொன்பது உடையோன்..."

மேற்படி இரண்டு கதைகளிலும் எடுத்தாளப்பட்டுள்ள விடயதானங்களைக் கருத்தூன்றிக் கணிக்கும் போது முன்னைய கதையில் கூறப்பட்டுள்ள கருப்பொருளாக வெறுமனே சிவபெருமான் அருளிச் செய்த வரம் ஒன்றின் மூலம் பராசார முனிவரின் மகள் நாகமங்கலை மாங்கனியாக பாண்டிய நாட்டில் உருவெடுத்து கொடுங்கோலரசனான பாண்டியனைப் பழிதீர்த்தாள் என்ற விபரமே தென்படுகின்றது. ஆயினும் அதன் காரண காரியங்கள் கூடிய விதிவசத்தின் செயற்பாடுகள் தெளிவாகக் கூறப்படவில்லை.

இருப்பினும் ஆரையம்பதிச் சமூகத்தின் மத்தியில் கூறப்பட்டுவரும் பின்னைய கதை மூலம் அக்கொடுங்கோலரசன் அவனது முற்பிறப்பில்,

1. காளி கோயிலை அவமதித்து சர்வேஸ்வர நாயகியான பார்வதியை அவமதிக்கும் தெய்வக்குற்றம் புரிந்தமை, அத்தோடு
2. அப்பாவிகளான எண்ணை வாணிபர்களை வீணாக சிரச்சேதம் செய்து நீதி நெறியினின்றுப் பிழைத்தமை

ஆகிய இருபெரும் அத்துமீறல்கள் தொடர்பான பாவவிமோசனங்களுக்கு வழிவகுக்கும் ஒரு நிகழ்வாகவே தாய் வாணிவிச்சியை கண்ணகை என்ற பேரில் பாண்டிய மன்னனிடமும் அதே சமயம் செல்வமும் செல்வாக்கும் செழிப்பும் கொண்ட உயர் வணிக குடும்பத்தில் மாசாத்துவன் மகனாக சேயையும் அவதாரம் மேற்கொள்ளச் செய்ததோடல்லாமல் முற்பிறப்பில் அவர்கள் தாய் மகன் என்ற உறவைக் கொண்டிருந்த காரணத்தினால் இப்பிறப்பில் விவாக சம்பந்தத்துடனான உறவு முறைமையினை செயற்படுத்த முடியாததொரு நிலையை உருவாக்கி அவர்கள் பிரிந்து செல்லவும் ஊழ் விதி வழி சமைத்துவிட்டது. முன்னைய ஐதீகக் கதையில் கூறப்படும் தகவல்களைவிட பின்னைய இக் கதையில் எமக்கேற்படக் கூடிய பல ஐயங்களுக்கு தெளிவு அடங்கியுள்ளமை குறிப்பிடத் தகுந்ததே.

மன்னன் சேரன் செங்குட்டுவன் கண்ணகைக்கு பெருவிழா எடுத்த கி.பி 123 - 135 காலத்தில் அப் பெருமன்னனின் அழைப்பினை ஏற்று இலங்கை மன்னன் கயவாகு வேந்தனும் பாண்டிய அரசன் வெற்றிவேற்செழியனும், சோழன் பெருகற்கிள்ளியும் கொங்குதேச அரசகுமாரன் இளங்கோவடிகளும் மக்ததேச மன்னரும் வட இந்திய அரசர் கனக விசயரும் கலந்து கொண்டு சிறப்பித்தனர்.

இவ்விழாவில் கயவாகுமன்னனின் வேண்டுகோளையேற்ற மன்னன் செங்குட்டுவன் சந்தன மரத்தால் செய்த கண்ணகை உருவமும் சிலம்பொன்றும் சந்தன மரப்பேளையில் வைத்து கயவாகுமன்னனுக்கு கொடுத்தான். பாண்டியமன்னன் அரசன் வெற்றிவேற்செழியனின் யானைமேல் சந்தனப்பலகையாற் செய்த பெட்டியையும் அரசனையும் ஏற்றி வேதாரணியத்தில் கொண்டு சென்று விட்டான். அங்கிருந்து கப்பலில் காரைதீவுக்கும்(காரைநகர்) கீரிமலைக்குமிடையிலுள்ள திருவடி நிலையில் இறங்கினான். யானைப்பவனிக்கு அங்கிருந்த யானைகள் அலங்கரிக்கப்பட்டு நிறுத்தப்பட்டிருந்தன. திருவடிநிலையிலிருந்து யானை ஊர் வலமாக அப்பட்டி வழியாக அங்கணாமைக்கடவைக்கு வந்தது. அங்கே முதலாவது ஆராதனை நிகழ்த்தபட்டது. அங்கிருந்து நாவற்குழியை அடுத்துள்ள வேலம்பறை எனும் இடத்திற்கு வைகாசி பூரணையன்று வந்து சேர்ந்தது பூரணைவிழா அங்கு நடந்தது. அங்கிருந்து கரம்பகம், கோவிற்குளம், நாகர்கோயில், வன்னிப்புட்டுக்குளம், விழாங்குளம், முள்ளியவளை, வற்றாப்பழை, சாம்பல் தீவு, திருகோணமலை, தம்பலகமம், பாலம்போட்டாறு, நீலாப்பளை வரையும் யானை ஊர்வலமாச்சென்றது. நீலாப்பளையிலிருந்து தாவளமாட்டின் மூலமாக கோராவெளி கொக்கட்டிமூலைக்கு சந்தனப்பலகையால் செய்த அம்மன் புனித சின்னங்கள் கொண்டு செல்லப்பட்டன.

பின்னர் தாண்டவன் வெளி, வந்தாறுமூலை, ஈச்சன்தீவு. கொக்கட்டிச்சோலை, முதலைக்குடா மகிழடித்தீவு, மண்முனை, தாழைநகர்(தாழங்குடா), மண்முனை, காத்தநகர்(ஆரையம்பதி), புதுக்குடியிருப்பு, செட்டிபாளையம், களுவாஞ்சிக்குடி, எருவில், மகிழுர், கல்லாறு, கல்முனை, வீரமுனை, காரைதீவு,

பட்டிமேடு, தம்பிலுவில், பாணமை, கதிர்காமம் கண்டிவரை கொண்டு செல்லப்பட்டது. கண்டியில் தலதாமாளிகையில் அச் சந்தணப் பலகையால் செய்த பெட்டி சேமிக்கப்பட்டது. என கடல் சூழ் இலங்கையில் கண்ணகை வழிபாட்டின் தோற்றம் பற்றிபல ஆய்வாளர்களால் எடுத்து இயம்பப்படுகின்றது.

வட இலங்கையில் உள்ள மேற்படி ஊர்களில் காணப்பட்ட கண்ணகை கோயில்கள் ஆறுமுக நாவலர்காலத்திலும் அதற்கு பிற்பட்டகாலத்திலும் வேவ்வேறு பெண்தெய்வ வழிபாடாக மாற்றம் பெற்றிருப்பதையும் சிங்கள மக்களிடையே பத்தினி தெய்யே வழிபாடாக கொள்ளப்பட்டிருபதனையும் காணலாம், ஆனாலும் மட்டக்களப்பு தேசத்தில் இவ் வழிபாடு கண்ணகை வழிபாடாகவே வேருன்றி இன்றும் நிலைத்திருப்பதை மேற்படி கண்ணகையம்மன் ஊர்வலமாக வந்த ஊர்களில் இன்றும் நிலைத்திருக்கும் பழம்பெரு ஆலயங்கள் மூலம் அறிந்து கொள்ளலாம்.

**மண்முனை கண்ணகை வழிபாடு**

கஜபாகு மன்னனின் காலத்திலேயும் அதன் பின்னரும் மட்டக்களப்பு தேசம் எங்கிலும் கண்ணகை வழிபாடு வியாபித்திருந்தது என கூறப்பட்டாலும் அதற்கு புத்துயிர் அளிக்கும் வகையில் யாழ்ப்பாணம் இருந்து கந்தன் என்பவரின் வருகை வரலாற்றில் முக்கிய இடம் வகிக்கின்றது. விமலதர்ம சூரியன் (1592-1604) கண்டியில் முடிசூடி இருந்த காலமான 16 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் யாழ்ப்பாணம் ஒத்துக்குடா கந்தன் என்பவரும் அவரது தங்கைகளான மயிலி, செம்பி என்பவர்களும் மற்றும் அவரது புத்திரி சமேதரரான ஏழு ஆலய கோவிக்குடும்பங்களையும் மூன்று நம்பி குடும்பங்களையும் அழைத்துக்கொண்டு ஏழு கண்ணகையம்மன் விக்கிரங்களோடு யாழ்ப்பாணத்தில் இருந்து படகேறி மண்முனையில் வந்திறங்கினர். அக்காலத்தில் மண்முனையில் அதிகாரத்தில் இருந்தவர்களிடம் தங்களின் கண்ணகை வழிபாடு பற்றியும் அவ் அம்பாளை வைத்து வழிபடுவதற்கும் தாங்கள் தங்குவதற்கும் இடம் வேண்டுமென கேட்டு பெற்றுக்கொண்டு மண்முனைக்கருகில் உள்ள ஊர் ஒன்றில் (புதுக்குடியிருப்புக்கும் கிரான்குளத்திற்கும் இடையிலுள்ள 'சிரம்பியடி' என

கூறப்படுகின்றது) குடியேறி ஏழுகண்ணகை விக்கரகங்களுக்கும் பூசைசெய்து வந்துள்ளனர்.

கண்டி அரசன் விமலதர்ம சூரிய மன்னனின் மட்டக்களப்பு பரிபாலனத்திற்கு பிரதிநிதியாக இருந்த ஒருவன், கந்தனும் அவனது சகோதரிகளும் அவனது புத்திரியும் அவர்களோடு வந்த நாட்டார் குடும்பமும் தனது அனுமதி இன்றி குடியேறியுள்ளனர் என்றும், இவர்கள் போத்திக்கேயரின் வேவுக்காரர்களாக இருக்கக்கூடும் எனவும் விமலதர்ம சூரிய மன்னனுக்கு செய்தி ஒன்றை அனுப்பினான். அரசனும் எங்கள் உத்தரவு இல்லாமல் குடியேறி இருக்கும் கந்தனையும் அவரது சகோதரிகளையும் வாவியில் அமிழ்த்தி கொல்லவேண்டும் எனவும், புத்திரியை காலிங்க குலத்தவருக்கு மணம் செய்து வைக்கவும். ஏழு கண்ணகை விக்கிரகங்களில் ஒன்றை இருந்த இடத்திலேயும் மற்றையவற்றை மட்டக்களப்பின் ஏனைய பிரதான ஊர்களிலும் அமர்த்தி நாட்டாரே பூசகராக இருக்கவேண்டும், ஆயினும் கோவியரே ஆலய ஊழியம் செய்ய வேண்டும் எனவும் ஓலை அனுப்பினான்.

இவ் உத்தரவின் பேரில் கந்தப்பரையும் சகோதரிகயையும் ஆற்றில் அமிழ்த்தி கொன்று விட்டு வில்வன் என்பவருக்கு கந்தனின் புத்திரியை திருமணம் செய்துவைத்த பின்பு ஆறு கண்ணகை அம்மன் விக்கிரகத்தையும் ஆறு ஊர்களில் இருத்தி ஒன்றை இருந்த இடத்திலே அமர்த்தி அரச ஆணைப்படி நாட்டாரையும் கோவியரையும் கண்ணகை வழிபாட்டுக்கு ஊழியம் செய்ய வழிசமைத்தான். இதன்படி புதுக்குடியிருப்பு, தாழங்குடா, மண்முனை, ஆரையம்பதி, செட்டிபாளையம், களுவாஞ்சிக்குடி, மகிழூர், எருவில், மகிழடித்தீவு, முதலைக்குடா, கொக்கட்டிச்சோலை போன்ற ஊர்களில் ஒத்துக்குடா கந்தனின் மூலம் வெளிப்படுத்தப்பட்ட கண்ணகை வழிபாடு பரவ ஆரம்பித்தது. ஒத்துக்குடாகந்தனின் வழித்தோன்றல்களால் அவர்கள் வாழ்ந்துவந்த மண்முனையில் காணப்பட்ட ஏழு குளங்களில் ஒன்றான கொக்கட்டியம் குளத்தருகே நீண்டு வளந்திருந்த கொக்கட்டி மர நிழலில் அழகான சிராம்பியமைத்து தாங்கள் கொண்டு வந்த முக்கிய புனித சின்னங்ளைக்கொண்டு வழிபாடு இயற்றி வந்தமையினால் கண்ணகை வழிபாடு மண்முனையில் தோற்றம்பெற்றது. இதுவே மண்முனை கண்ணகையின் வழிபாட்டின் ஆரம்பமும் தொடர்ச்சியுமாகும்.

### ஆரையம்பதி கண்ணகை வழிபாடு

பழமைவாய்ந்தவைகளாக மட்டக்களப்பு தேசம் எங்கும் பரந்து கிடக்கும் கண்ணகையம்பாள் ஆலயங்களான வந்தாறுமூலை, ஈச்சநகர்(ஈச்சந்தீவு) காத்தநகர் (ஆரையம்பதி), மண்முனை, புதுமைநகர் (புதுக்குடியிருப்பு), மகிழடித்தீவு, முதலைக்குடா, கொக்கட்டிச்சோலை செட்டிநகர் (செட்டிபளையம்) எருவில், மகிழுர், கல்முனை, காரேறுதீவு(காரைதீவு), வீரமுனை, தம்பிலுவில் மற்றும் பட்டிமாநகர் என 16 ஊர்கள் சார்ந்து பாடப்பட்ட ஊர் சுற்று காவியத்தின் 3ம் பாடல் பின்வருமாறு,

*தண்ணிமழை யில்லாத தென்னகுறை தானோ*
*சண்டவலி தீக்கிரக தீயநிலை தானோ*
*இன் நிலமென் மானிடர்கள் செய்தகுறை தானோ*
*இதுபுதுமை யிப்புவியில் நாங்களறி வோமோ*
*என்னகுறை யானாலும் நீயதனை மாற்றி*
*இரக்கமுட னேமழைவ ரக்கருணை செய்வாய்*
*நன்நில மதிகக்கவரு **காத்தநகர்** தன்னில்வாழ்*
*நளினமல ரணையபத நடனசுந் தரியே*

மேற்படி ஊர்சுற்றுக்காவியம் யாரால் எப்போது பாடப்பட்டது என சரியான மதிப்பீடு காணப்படவில்லையெனினும், **காத்தநகர்** என்று ஆரையம்பதியைக் குறித்துப் பாடப்பட்டுள்ளதால் இது காத்தான் என்ற வேடன் வாழ்ந்திருந்த காலமான 16ஆம் நூற்றான்டின் ஆரம்பத்திற்கும் 1872 ம் ஆண்டுக்கும் இடைப்பட்ட காலத்தில்தான் பாடப்பட்டிருக்க வேண்டுமென்பதில் நம்பிக்கை வைக்கலாம். காத்தான் வசித்து வந்த பிரதேசமான காத்தான்குடி எனும் கிராமமானது, பண்டைய தமிழ் மன்னர்களால் கொண்டுவரப்பட்ட ஆரையம்பதி வாழ் சமூகம் வாழும் பிரதேசம் மற்றும் துருக்கி தேசத்தில் இருந்து வந்து குடியேறிய இஸ்லாமியர்கள் வாழும் பிரதேசம் என, பிரித்தானியரின் ஆட்சி காலமான 1872 இல் இரண்டு வேறு வேறான ஊர்களாக பிரிக்கப்பட்டு காத்தான்குடி, ஆரைப்பற்றை என்று இடப்பெயர்கள் பதிவு செய்யப்பட்டன. அதற்கு முன்பு பிரிக்கப்படாத ஒரே நிலப்பரப்பாகவே இவ்விரு கிராமங்களும் காத்தான்குடி என்ற பெயரில் இருந்தததாக பூர்வீக சரித்திரம் கூறுகிறது.

எனவே 18ம் நூற்றாண்டுக்கு முன்பிருந்தே காத்தநகரில் (ஆரையம்பதியில்) கண்ணகை வழிபாடு சிறப்புற்று இருந்திருக்கின்றது என துணிந்து கூறலாம். ஆரம்ப காலங்களில் களிமண் மற்றும் ஓலை குடிசை அமைத்து சடங்கு நடாத்தப்பட்டு வந்திருக்கின்றது என முன்னோர்கள் வாயிலாக அறியக்கிடக்கின்றது. இப்படியாக ஆரையம்பதியில் கண்ணகையம்பாளின் வழிபாடு நடைபெற்றுக் கொண்டிருக்கும் போது சின்னவாத்தியார் என்று அழைக்கப்படும் கந்தசுவாமி மற்றும் கண்ணகை அம்பாள் ஆலயங்களின் கணக்கப்பிள்ளையாகக் கடமைபுரிந்த சின்னத்தம்பி உபாத்தியார் அவர்களின் காலத்தில் (1850-1914) நடைபெற்ற இறைங்கைங்கரிய நிகழ்வு ஒன்று இக்கிராமத்தின் வரலாற்றில் முக்கிய நிகழ்வு ஒன்றாக அமைகின்றது.

திருநீற்றொழி திகழச் சிரித்த முகத்துடனான கந்தனின் வழித்தோன்றலில் வந்த வயோதிபமாது மண்முனை எனும் வளம்செறி இடந்தனில் உள்ள கொக்கட்டியம் குளத்தருகே நாவலும் வேம்பும் நன்கு செழிந்திருந்த இடந்தனில் கொக்கட்டிமரம் அருகே அழகான ஓலை குடிசை அமைத்து கண்ணகைக்கு வழிபாடு இயற்றி வந்தார். அக் காலத்தில் அவ்வழிபாடு இயற்றி வந்த குடிசை அடிக்கடி எரிவதாகவும் அம்மன் எதிரில் போய்வருபவர்களுக்கு தீங்கு நிகழ்வதாகவும் கண்டு, அம்பாள் அகோரமாக இருப்தாகக் கருதி கணக்குப்பிள்ளை சின்னவாத்தியார் அவர்களை சந்தித்து அவ் அம்பாளை ஆரையம்பதியில் வைத்து வழிபட வேண்டினாள். அதற்கு சின்னவாத்தியாரும் உடன்பட்டார். இருப்பினும் வாயோதிப மாதுவை சார்ந்தவர்களுக்கு இப்பேச்சுவர்த்தையில் உடன்பாடு இல்லாததால் அம்மனை தேங்காய் கொட்டுக்குள் ஒளித்து விட்டார்கள். அன்றிரவு அவ் வயோதிபமாதுக்கு சொற்பனத்திலே அம்மன் தோன்றி 'கவலைப்படாதே! நான் தேங்காய் கொட்டுக்குள் இருக்கிறேன்' என்றார். கண்விழித்து நடுநடுங்கிக் கொண்டு ஓடிப்போய் தனது தேங்காய் கொட்டுக்குள் பர்த்தபோது. அங்கே அம்மன் பேழை இருந்தது. அவள் அதை அளவற்ற மகிழ்ச்சியோடு எடுத்துக் கொண்டு வந்து பழையபடி வைத்து வணங்கினாள். மீண்டும் மீண்டும் அம்மன் ஒரு நாளைக்கு ஒர் இடத்தில் மாறி இருப்பதையும் கண்டாள். அதுமட்டுமல்லாமல் அவள் பல அதிசயங்களைப் பார்த்தார். இனி இந்த அம்மனை கணக்குப்பிள்ளையுடன் பேசியதற்கு அமைவாக அவரிடம் ஒப்படைத்து விட வேண்டுமென்று தீர்மானித்து ஆரையம்பதிக்கு அம்மனை கொண்டுவந்து

சின்னவாத்தியாரிடம் ஒப்படைத்து விட்டார். சின்னவாத்தியாரும் மனநிறைவெய்தி அவ் வயேதிபமாதுவை மனநிறைவெய்தும் வகையில் கௌரவித்து கொண்டாடினார். பின்னர் கந்தசுவாமி ஆலயத்தில் அம்மனை ஒப்படைத்து நித்திய வழிபாட்டுக்கான ஏற்பாடுகளை செய்வித்தார். இந் நிகழ்வு ஆரையம்பதி மக்களின் வாழ்வியலோடு ஒன்றித்துவிட்ட கண்ணகையம்மன் வழிபாட்டின் பன்மடங்கு பரிபூரணத்தை இட்டுச்சென்றது. இப்பிரதேசத்தின் சிறப்பும் பன்மடங்காக அதிகரிக்க காரணமாய் அமைந்தது. மண்முனை கண்ணகை வழிபாட்டுமையமானது ஆரையம்பதி கண்ணகை வழிபாட்டுடன் சங்கமித்து ஒன்றித்தன் பின்பு ஆரையம்பதியில் வீற்றிருந்த அம்பாளையே மண்முனை கண்ணகை என்று வணங்கி வரும் வழக்கம் இருந்து வந்திருக்கின்றது என்பதும் இங்கு கவனத்தில் கொள்ளத்தக்கது. அது மட்டுமல்லாமல் மண்முனை கண்ணகை வழிபாடு நடைபெற்றிருந்த இடத்தினருகே 1990 ஆம் ஆண்டுகளில் மண்முனை மக்களால் காளி அம்மன் வழிபாடு ஒன்று தோற்றுவிக்கப்பட்டு மண்முனை பத்திரகாளி அம்மன் ஆலயம் என இன்று வழங்கப்பட்டு வருகின்றது.

## பத்தக்கட்டாடியார்

ஆரையம்பதிக்கு மண்முனை அம்பாள் வந்து அமர்ந்ததன் பின்னர் அவளுக்கு முறையான பூசைசெய்யும் வழிகளை தேடி கண்ணகைக்கு பூசை செய்யும் வழித்தோன்றல் பத்தன் என்பவரை ஊரார் பணித்தார்கள். எனக்கு பூசை செய்ய இயலாது மந்திரமும் தெரியாது மடை வைக்க நானறியேன். என்று அவர் மறுத்து விட்டார். சரியென்று சொல்லிச் சில மந்திரம் தெரிந்த பூசாரிமார்களின் பெயர்களையும் பத்தனின் பெயரையும் எழுதி திருவிளச்சீட்டு போட்டார்கள். பக்தி பூர்வமாக குலுக்கிய சீட்டுக்களிலே அம்மனை நினைத்து சீட்டொன்றை தெரிவு செய்து அதை ஆலயத்திலே வைத்து வணங்கி திறந்து பார்த்த போது பத்தனின் பெயர்தான் காணப்பட்டது. அதனாலே பத்தனையே அம்மன் விரும்பியிருப்பதனால் நீதான் பூசை செய்ய வேண்டும். உனக்கு தெரிந்தளவில் பத்திர புஸ்பத்தை வைத்து மன்றாடி வணங்கு என்று வயது முதியவார்கள் சொன்னார்கள். அதன்படி பத்தன் சில நாட்கள் செய்துவிட்டு "என்னால் பூசை செய்ய இயலாது. மந்திரமும் தெரியாது மடை வைக்கவும் தெரியாது ஊரவன் என்னை விடுகிறானுகள் இல்லை அம்மா நான் என்ன செய்வேன்" என்று அழுதான்.

ஒருநாள் அதிகாலை பத்தனை அழைத்து அவனின் நாவிலே எழுதி பூசை செய்யூம் முறையையும் சொல்லிக் கொடுத்தாள் அம்மன். அதன் பின் சந்தோசமாகப் பத்தன் மறுக்காமல் பூசை செய்து கொண்டு வந்தான். பின்னர் தான் அம்மனின் திருவருள் என்று தெரியவந்தது. இவரே ஆரையம்பதி கண்ணகை அம்மனின் முதலாவது கட்டாடியார் ஆனார். இவரை பத்தக்கட்டாடியார் என ஊரவர் அழைக்க ஆரம்பித்தனர். இப்பத்தக்கட்டாடியார் ஆரையம்பதி ஆலடித்துறையை வசிப்பிடமாக கொண்டிருந்தவராவார்.

## காவியம் இல்லை என்ற குறை தீர்த்த அம்பாள்

பத்தக் கட்டாடியர் பூசை செய்த காலத்திலே புலவன் என்பவன் ஒருவன் முறைக்கு முறை வந்து அவருக்கு தொல்லை கொடுத்தான். விநாயகப் பானை பொங்க விடாமல் பானையைத் தடுப்பது, பால் கொதிக்கும் போது உதிர நிறமாக மாற்றுவதென அம்மனின் பூசைக்கு இடையூறு கொடுத்தான். இதனை பத்தக்கட்டாடியர் மாற்றிப் பாலாக்குவர். தேங்காய் வெட்டித் தடை நீக்குவார் பாலமிர்தம் பொங்கும் போது பானையைப் பிளக்க வைப்பான் பானை விரிந்து வரும் போதே மற்றைய பூசாரிமார் உடனே பானையை பொருத்த பச்சரிசியூம் மஞ்சளும் சேர்த்தரைத்த பசையைக் கொண்டு வெடிப்பை ஒட்டிச்சீலையை கட்டித் திறம்பட ஒட்டிவிடுவர். சில மந்திரங்கள் சொல்லி அவன் மேலும் தடுக்காவண்ணம் தடையை வெட்டி காவல் பண்ணி பொங்கலை நிறைவு செய்ய உதவிசெய்வார்கள். இதனால் குளிர்த்தியாட நேரம் சென்றுவிடும். புலவனின் செயலாலும் பின்னுக்கு கைகளைக் கட்டிக் கொண்டு இங்கு என்ன இருக்கு என்று அம்மனை மதியாமலும் புலவன் நிற்பதால் பத்தக்கட்டாடியார் மிகவும் வருந்தினார். இவன் கையை எடுத்துக் கும்பிடாவிட்டால் நான் இனி பூசை செய்யமாட்டேன் தாயே என பிடிவாதத்துடன் படுத்துவிட்டார். அம்மன் பத்தனிடம் தோன்றி அவன் நாளைக்குப் பாடுவான் கவலைப்படாமல் பூசை செய் என்று பணிவிடை கொடுத்தார். அதை கட்டாடியார் சொல்லி ஊரில் படித்தவார்கள் எல்லாம் எழுத்தாணியுடன் பூசை நேரத்தில் ஆலயத்தில் வந்து ஆயத்தமாக நின்றார்கள். பக்திபூர்வமாக பத்தக்கட்டாடியார் பூசைசெய்து அம்மனை நினைத்து அழுது நடுங்கிப் பஞ்சாலத்தியைத் தாயே என்று கூறி உயர்த்த புலவன் இரு கைகளையும் சிரமேற் குவித்துப் பாடினான்.

நின்றவர்கள் பாடலை ஆளுக்கொரு அடியாக எழுதிச் சேர்த்து தொகுத்து அமைத்த பாடலே கல்யாணக்கால் சுற்றுக்காவியம் ஆகும். இப்போதும் இக்காவியமே அம்பாளுக்கு இறுதி நான்கு நாட்களும் பாடப்படுகின்றது. இப்புலவன் புதுக்குடியிருப்பிலே வாழ்ந்தவன். இவன் வாழ்ந்த தென்னந்தோட்டம் இப்போதும் புலவன் தோட்டம் என்று அழைக்கப்படுவது மட்டுமல்லாது ஆவணங்களில் கூட புலவன் தோட்டம் என்றே இத்தோட்டம் அடையாளப்படுத்துவதும் குறிப்பிடத்தக்கது. தற்பொழுது இத்தோட்டம் அலயப்போடியார் அவர்களின் பேரன் வேலிப்பிள்ளை ஜெயந்தன் என்பவரின் பொறுப்பில் உள்ளது.

### மஞ்சம்தொடுவாய்க்கு சென்று வரும் அம்பாள்

மஞசம்தொடுவாயில் அமைந்திருக்கும் கண்ணகை அம்மன் ஆலயத்திற்கு வைகாசி சடங்கு முடிவுற்றதும் ஆனி மாதத்தில் ஆரோகணித்து அம்மனை கொண்டு சடங்கு நடத்தும் முறை ஒன்று நடைபெற்று வந்துள்ளது. வைகாசி சடங்கு முடிவுற்றதும் அம்பாள் ஆனி மாதத்தில் பட்டுக்குடை விரிக்க நிழல்பாவாடை விரிக்க கந்தசுவாமி ஆலயத்தில் இருந்து புறப்பட்டு காட்டுமாவடி துறையை சென்றடைவார்.

காட்டுமாவடி துறைமுகத்தில் இரண்டு தோணிகளை இணைத்து தோணியைச்சுற்றி கம்பு நடப்பட்டு அதில் வெள்ளை மறைப்பு செய்யப்பட்டு அலங்கரிக்கப்பட்டு புதுமாதிரியான வள்ளம் ஒன்று தயாராக இருக்கும். அவ் வள்ளத்தில் அம்மனைத் தாங்கிய கட்டாடியார், பறைமேளம் இயற்றி சேவிப்போர் என்பவர்களைச் சுமந்து கொண்டு மஞ்சம்தொடுவாயை நோக்கி மட்டக்களப்பு வாவியில் பயணம் தொடங்கும். ஆரையம்பதி தொடக்கம் காத்தான்குடி மஞ்சந்தொடுவாய் வரை அடியார்கள் ஆற்றங்கரைக்கு வந்து அம்மன் ஆற்றில் செல்லும் அழகை கண்ணுற்று தங்களுடன் கொண்டுவந்திருந்த பூக்களை ஆற்றில் சொரிந்து பக்தியால் வணங்கி நிற்பர். அம்பாள் காத்தான்குடி பகுதியை கடந்து போகும் போது காத்தான்குடியைச் சேர்ந்த அன்பர்கள் வாவியில் பூச்சொரிந்து அம்மனை வணங்கி நிற்பர். இனம் மதம் கடந்து அம்பாளின் அனுகிரகம் வேண்டி நிற்கும் அடியவரை காண்பதே பெரும்பாக்கியமாகும்.

ஊர் பிரமுகர்கள் ஊர் மக்கள் என ஒரு மக்கள் கூட்டமே அம்பாளை வரவேற்க மஞ்சம்தொடுவாய் துறையில் காத்து நிற்பர். அம்பாள் மஞ்சம்தொடுவாய் துறையை சென்றடைந்ததும் அம்மாளை நிழற்குடை பிடித்து நிலப்பாவாடை விரித்து மஞ்சந்தொடுவாய் கண்ணகை அம்பாள் ஆலயம் வரை அழைத்துச்சென்று பின்னர் ஆலயத்தில் அம்மனை மூலஸ்தானத்தில் இருத்தி சடங்குகள் நடைபெற்று. ஆனி முழுமதிதினத்தில் திருக்குளிர்த்தியும் நடைபெறும். திருக்குளிர்த்தி முடிந்ததன் பின்னர் அம்பாள் ஆரையம்பதியை நோக்கி மட்டக்கப்பு வாவியூடாக புறப்பட்டு கந்தசுவாமி ஆலயத்தை வந்தடைவார். அடுத்த வைகாசி அம்பாள் சடங்கு வரையும் அம்பாள் கந்தசுவாமி ஆலயத்தில் நித்திய பூசைகளுடன் இருந்து அருள்புரிவாள். இவ் வழக்கம் 1930 தொடக்கம் 1935 ஆம் ஆண்டுகளுக்கு இடைப்பட்ட காலத்தில் வழக்கொழிந்து போயிருப்பதாக அறியமுடிகின்றது.

## பேழைபோரோளியாகிய அம்பாள்

மட்டக்களப்பு தமிழகம் என வழங்கப்படும் வெருகல் தொடக்கம் பொத்துவில் வரையிலான நிலப்பரப்பான 850 சதுர மைல் பரப்பில் ஏறக்குறைய 60 க்கும் மேற்பட்ட கண்ணகை அம்பாள் ஆலயங்கள் வியாப்பித்து இருக்கின்றன. ஒவ்வெரு ஆலயமும் தனக்கென்று தனித்துவத்தை கொண்டது அனேக ஆலயங்களில் மூல முர்த்தியாக ஐம்பொன் சிலைகளே நிலைபெற்றுள்ளன. என்பதுடன் சில ஆலயங்களில் கிராமிய வழிபாட்டுக்கே உரித்தான முகக்களைகளே மூலவராக அவ்அவ் ஆலயங்களை அலங்கரிக்கின்றன என்பதும் நிதர்சனமாகும்.

ஆரையம்பதி கண்ணகை அம்மாள் ஆலயத்தை பொறுத்தவரையில் மேற்படி வழக்கத்தில் இருந்து சற்று வேறுபாடான மூலாதாரத்தை கொண்டுள்ளமை ஒரு சிறப்பான தனித்துவமாகும். இங்கு கண்ணகை அம்பாள் சடங்கு காலத்தில் மூலஸ்தானத்தில் எழுந்தருளப்பண்ணப்படுவதும் திருக்குளிர்த்தியாட வைக்கப்படுவதும் சடங்கு காலமான 8 நாட்கள் தவிர்ந்த ஏனைய அனைத்து நாட்களும் மூன்று காலப்பூசைகளுடன் ஸ்ரீ கந்தசுவாமி ஆலயத்தின் அர்த்தமண்டபத்தில் எழுந்தருளப்பண்ணப்பட்டு இருக்கும் பேரோளியாகிய அம்பாள். ஓர் சிலைவடிவோ முகக்களை வடிவாகவோ உருவான அம்பாள் அல்ல. அவ் அம்பாள் ஓர் சிறிய பேழை வடிவாய் அமர்ந்த பேரொளியானவள்

என்பது ஒர் முக்கியத்துவமான விடயமாகும். அவ் அழகிய திருவாசியுடன் இணைந்த அம்பாள் பேழை உடன் எழுந்தருள பண்ணப்பட்டிருக்கும் ஒற்றைச்சிலம்பும் இணைந்ததே ஆரையம்பதி அம்பாளின் திருவுருவமாகும்.

மட்டக்களப்பு தேசத்தில் மட்டுமல்ல இலங்கைத்திருநாட்டில் எந்தவோர் மூலவரும் பேழை வடிவாய் அமைந்த அம்பாள் இல்லை என்பது இங்கு குறிப்பிடத்தக்கது. இவ் சிறப்பு ஆரையம்பதி அம்பாளை மட்டுமே சாரும் என்பது சற்று பெருமை கொள்ளத்தக்கதொன்றாகும். அதுமட்டுமல்லாது அம்பாளை ஊனக்கண்ணால் நேரில் எவரும் இதுவரையில் பார்த்ததில்லை. அம்பாளின் படி கடந்த கட்டாடிமார் மட்டுமே அம்பாளை நேரெதிரில் தரிசிக்கும் மற்றும் அம்பாளை அணைத்துக்கொள்ளும் பாக்கியம் பெற்றவர்கள். அப் பாக்கியத்தைப்பெற்ற கட்டாடியார் மகேஸ்வரன் அம்பாளின் காலத்தை "2000 வருடங்களுக்கு மேல் பழமைவாய்ந்த தாய்" என வரையறை செய்கின்றார். சைவர்களுக்கே உரித்தான அருஉருவ வழிபாடு பேழை எனும் அரு உருவமாகி கண்ணகை வழிபாட்டுடன் ஒன்றித்திருப்பதாக இதை நாம் நோக்கலாம்

**ஆரையம்பதி மக்களும் கண்ணகை வழிபாடும**

கி.மு 2 ஆம் நூற்றாண்டுக்கு வரையறுக்கப்படும் ஆரையம்பதி கிராமத்தின் தோற்றம் மற்றும் பூம்புகார்நகரம் மற்றும் மதுரைநகர் போன்ற நகர கட்டமைப்புகளுடன் இக்கிராமத்தின் அமைப்பினை ஆய்வாளர்கள் ஒப்பிட்டு நோக்குவதனடிப்படையிலும் இங்கு வாழும் சமூகத்தவர்களும் அவர்கள் வாழ்வதற்கு என ஒதுக்கப்பட்டிருக்கும் தெரு முறைமை என்பவற்றினுடாகவும் இக்கிராமமானது நன்கு திட்டமிடப்பட்டு கட்டமைக்கப்பட்ட ஒரு கிராமம் என்பது வெளிப்படை.

செங்குந்தர்தெரு, வேளாளர் தெரு, தட்டாரதெரு, பறையர்தெரு, பணிக்கர்தெரு, வண்ணார தெரு என்பற்றுடன் ஆரைப்பற்றை தெரு, நடுத்தெரு, முகத்துவாரத்தெரு என ஒவ்வெரு சமூகமும் தமது இருக்கைகளை வரையறுத்து கூட்டு சமூக கிராமமாக இக் கிராமம் அமையப்பெற்றிருந்தாலும் ஆரைப்பற்றை தெரு, நடுத்தெரு, முகத்துவாரத்தெரு என்ற தெருக்களில் வாழ்ந்திருந்த குருகுலத்தோரே இக்கிராமத்தின் ஆதிகுடிகளாகவும்

பெரும்பான்மையினராகவும் காணப்படுகின்றனர். ஒவ்வொரு சமுகத்தினரும் தங்களுக்கென ஒதுக்கப்பட்ட உரிமை மற்றும் கடமையாற்றும் பணிகளுடனான தொடர்புகள் என்பவை முழுமையாக கந்தசுவாமி ஆலயத்தை மையப்படுத்தியே பின்னிப்பிணைந்து காணப்படுகின்றனர். இன்றைய சனத்தொகை அதிகரிப்பு, காலமாற்றம், நகரமயமாக்கல் மற்றும் உட்பூசல்கள் போன்றவற்றாலும் இக் கிராமத்தின் கட்டமைப்புகள் சற்று உருக்குலைந்திருப்பினும். அடிப்டையில் இக்கிராமம் நன்கு திட்டமிடப்பட்டு கட்டமைக்கப்பட்டது என்பதும் ஸ்ரீ கந்தசுவாமி ஆலயமே இதன் மையப்புள்ளியாக இருந்திருந்தது என்பதும் பொய்மொழிகளாகி விடாது.

இன்னுமெரு கட்டமைப்பாக இக்கிராமத்தில் வாழும் குருகுலத்தோரிடையே இன்றும் காணப்படும் குடி முறைமையும் முக்கியத்துவம் வாய்ந்ததாக அமைகின்றது. தாய் வழி பரம்பரையாக அறியப்படும் முறைமையின் ஊடாக புலவனார்குடி, வங்காளக்குடி, முதலித்தேவன்குடி, வீரமாணிக்கன்குடி, திருவிளங்குகுடி, அலரித்தேவன்குடி, ஆறுகாட்டிகுடி, மன்றுளாடிகுடி, பாலசிங்கரெட்ணகுடி, சம்மான்ஓட்டிகுடி, பத்தினியாச்சிகுடி, பொன்னாச்சிகுடி, குரவர்குடி, கணபதியார்குடி, சிறப்பினார்குடி என 16 தாய் வழிபரம்பரையினர் அடையாளம் காணப்படுகிறார்கள். ஒவ்வொருவரும் ஸ்ரீ கந்தசுவாமி ஆலயத்தில் தங்களுக்கே உரிய விழாக்களை நடத்தும் கடமையினை இன்றும் பின்பற்றி வருகின்றனர்.

இக் குருகுலத்தோர் ஒரு காலத்தில் கப்பலோட்டிகளாகவும் கரையோர காவல்படையினராகவும் தென் இந்திய மன்னர்களால் கொண்டு வரப்பட்டவர்கள் இவர்களில் பலர் கப்பல்களின் சொந்தக்காரர்களாகவும் நாவாய், ஓடம் முதலியவற்றை இயக்கத் தெரிந்த மாலுமிகளாகவும் இருந்தவர்களின் சந்ததியினர். மட்டக்களப்பு தமிழகத்தில் முக்கியத்துவம் பெற்றதாக விளங்கிய தீரவைத்துறைமுகம் என வழங்கப்படும் பெரிய கிட்டங்கிகளை உள்ளடக்கியதான காணப்பட்ட துறைமுகத்தின் தூர்ந்துபோன தடங்களை இன்றும் முகத்தவாரத்தெருவில் காணலாம்.
இக்குல மக்களின் நீரூடான பயணங்கள், அரச பணிகள் என்பனவற்றின் எதிர்விலிருந்து தங்களை பாதுகாக்க, கடலோடி மீகாமன் கண்ணகையின் வரம் பெற்றவன் என்பதை முன்நிறுத்தி கண்ணகையை தங்களது குலதெய்வமாக ஏற்றுக்கொண்டனர்.

"திருவிருக்கும் மணிமார்பன் சிறந்ததமிழ் ஆரியர்கோன்
மருவிருக்கும் மார்பணிந்த மண்டலத்தில் வணிகர்மைந்தன்
தருவிருக்கும் கைதலத்தான் தந்திவன்னப் பெருமாள்காண்
குருகுலத்தோர் கொண்டாட இக்கதையை பாடிவைத்தான்..."

என அடைக்கலக் காதை செய்யுள் 3 இல் கண்ணகை வழக்குரை ஏன் பாடப்பட்டது என குறித்துக்காட்டுகின்றார் கண்ணகை வழக்குரையை பாடிதாக கருதப்படும் புலவர் சிங்கை செகராசசேகரன். உண்மையில் இவ்வூர்மக்களுக்கும் கண்ணகை வழிபாட்டுக்கும் உள்ள தொடர்பு தொன்மம் நிறைந்தாகும்.

ஈழத்தமிழர்கள் சித்திரைப் புதுவருட பிறப்பிற்கு பின்னர் அடுத்துவரும வைகாசி மாதத்தில்தான் திருமண வைபவங்களுக்கு நாள் குறித்து நடாத்துவார்கள். ஆனால் ஆரையம்பதி மக்களைப் பொறுத்தவரையில் சித்தரை வருடப்பிறப்புக்கு பின்னர் அடுத்த மாதம் வைகாசி அம்பாளின் குளிர்த்தி முடிவுற்ற பின்னரே திருமணநாட்கள் அமையுமாறு நாள் குறிக்கப்பட்டு திருமணங்கள் இடம்பெற்று வருவதை இன்றும் காணலாம். அம்பாளின் கல்யாணச்சடங்கின் பின்பே தங்கள் வீட்டு கல்யாணம் நடாத்தப்பட வேண்டும் என இங்கு எழுதப்படாத வழக்கமாக கடைப்பிடிக்கப் படுகின்றது, மேலும் சடங்கு காலங்களில் வெளியூர்பயணம் செல்லாதிருத்தலும் வெளியூரில் தங்கியிருப்பவர்களும் ஊர் வந்து சேர்ந்துவிடுதலும் சிறப்பான விடயமாகும்.

இன்னுமொரு விடயமாக ஆரையம்பதியை சேர்ந்த கொஸ்தாப்பர் தம்பாபிள்ளையின் மகன் பொன்னம்பலம் என்பவர் கண்ணகை மீது தீராத பக்தி கொண்டவர். அவர் திருகோணமலைக்கு சென்று அங்கு வாழ்ந்த காலத்தில் திருகோணமலை உவர்மலையில் கண்ணகை வழிபாடு ஒன்றை தோற்றுவித்தார். அவ் ஆலயம் தற்போது திருகோணமலையில் மிகவும் பிரபல்யமான ஆலயமாக இன்று வியாப்பித்திருக்கின்றது. இக்கிராம மக்கள் இங்கிருந்தால் மட்டுமல்ல எங்கு சென்றாலும் தங்களது குலதெய்வத்தினுடன் நெருக்கம் கொண்டவர்களாக தங்களை நிலைநிறுத்திக்கொள்வார்கள் என்பது திண்ணமாகும்.

## பொன்னாச்சி குடி மரபும் கட்டாடிமாரும்

ஆகம முறை சாராது தமிழ் மந்திரங்களால் உச்சாடனம் பண்ணப்பட்டு பத்தாதி எனப்படும் பூசை முறையில் ஆசார சீலர்களான அம்பாளுக்கு பூசை செய்பவர்கள் கட்டாடியார் என அழைக்கப்படுவார். ஆரையம்பதி கண்ணகை அம்பாள் ஆலயத்தில் பத்தக்கட்டாடியார் என்பவரே ஆரம்பகால கட்டாடியார் என முன்பு கண்டோம். இப் பத்தகட்டாடியாரின் பின் அவரது தாய்வழிப்பரம்பரையாக உள்ள பொன்னாச்சி குடியினரே மாமன் மருமகன் என கட்டாடியாராக இருந்து வருகின்றனர். இவர்களும் ஆரையம்பதி குருகுலத்தவர்களாக தங்களை அடையாளப்படுத்துகின்றனர்.

பாரம்பரிய முறைப்படி ஒரு நேரத்தில் இருவர் மட்டுமே கட்டாடியாராக இருக்கும் தகமை உடையவராவார். பிரதம கட்டாடியார் தவிர்ந்த இன்னுமொருவர் அவரது தகுதியடிப்படையில் அதே குடிவகுத்து வாரிலிருந்து தேர்ந்தெடுக்கப்படுவர். இருப்பினும் பிரதான கட்டாடியாராக இருப்பவர் மட்டுமே அம்பாளை அழைத்தவரும், அபிசேகம் பண்ணும், மூலஸ்தான பூசைகளை மேற்கொள்ளும் மற்றும் திருக்குளிர்த்தியாடும் கடமையை மேற்கொள்ளும் தகுதியுடையவராக இருப்பார்.

அம்பாளை நேரில் தரிசிக்கும் அம்பாளுக்கு பூசையியற்றும் தகுதியை அடைவதற்கு படிகடத்தல் எனப்படும் தீட்சையை பெற்றிருக்க வேண்டும் இங்கு படிகடத்தல் என்பதே இங்கு ஆசாரி அபிசேகம் என்ற பொருள்படும் கூற்றாகும்

ஆரம்பத்தில் பத்தக்கட்டாடியார் என அழைக்கப்பட்ட பத்தன் என்பவர் கிட்டத்தட்ட 21 ஆண்டுகளும், அவரின் பின்னர் கிட்ணகட்டாடியார் என அழைக்கப்பட்ட கிட்ணன் என்பவர் 26 ஆண்டுகளும் சின்னத்துரை கட்டாடியார் என அழைக்கப்பட்ட சின்னத்துரை என்பவர் 44 வருடங்களும் செல்லப்பகட்டாடியார் என அழைக்கப்படும் இளையதம்பி என்பவர் 33 வருடங்களும் இவரின் பின்னர் மகேஸ்வரகட்டாடியார் என அழைக்கப்டும் மகேஸ்வரன் என்பவர் கடந்த 3 ஆண்டுகளாகவும் பிரதமகட்டாடியார்களாக கடமையாற்றிவருகின்றனர். தற்போது படிகடந்த உதவிக்கட்டாடியார் ஆக தட்சணாமூர்த்தி கடமையாற்றி வருகின்றார்.

குறித்த கட்டாடியார்கள் உதவி கட்டாடியாராக இருந்து பின்னர் பிரதமகட்டாடியார் எனும் தகுதியை அடைவதாலும் குரு சீட முறையை பின்பற்றி வந்துகொண்டிருப்பதாலும் அம்பாளுக்கு பூசையியற்றும் முறையில் இவர்களது காலத்தில் எந்தவித சிறிய மாற்றங்களும் இல்லாமல் தொடக்கம் இருந்து இப்போது வரை ஒரே முறையான நடைமுறைகள் கடைப்பிடிக்கப்பட்டு வருகின்றமை குறிப்பிடத்தக்கது. அது மட்டும்மல்லாமல் கிழக்கில் பெரும்பாலான ஆலயங்கள் சமஸ்கிரதமயப்படுத்தப்பட்டு ஆகம விதிகளுக்குள் உட்படுத்தப்படும் நிலையில் ஆரையம்பதி கண்ணகை அம்பாளின் வழிபாடுகள் எந்தவோர் மாற்றமும் அன்றி பின்பற்றப்படுவதும் குறிப்பிடத்தக்கதொன்றாகும்.

**பத்ததி பூசை முறைமை**

ஆலய கிரிகைமுறைகளையும் மந்திரங்களையும் எடுத்துரைக்கும் ஆவணமே பத்ததி ஆகும். இவ் பத்ததி ஆனது ஒர் கட்டாடியார் ஆடை அணிகலன் எவ்வாறு அணிவது என்பது தொடக்கம் இறை முகூர்த்தத்தை எழுந்தருளப்பண்ணுவது வரையும் திருக்கதவு திறத்தல் தொடக்கம் இறுதி வைரவர் வழிபாடு வரையிலான அனைத்து முறைகளும் வரைறை செய்யப்பட்டதாக ஏடுகளில் பேணபட்டு வருகின்றது. கண்ணகை அம்பாளது வழிபாட்டு முறையானது அம்மையிடம் மண்டியிட்டு மன்றாடி வணங்குவதையே அடிப்படையாக கொண்டது அம்பாளுக்கு உச்சாடனம் பண்ணப்படும் மந்திரங்கள் தொடக்கம் அம்மையை போற்றிப்பாடப்படும் காவியங்கள் வரை இரந்து தன்னை அம்மையிடம் ஒப்படைத்து நீயே கதியம்மா என வழிபடுவதே மரபாகும்.

அம்பாளை இரந்து வேண்டுவதற்கு

**" ஓம் திரைவுரழ் திருகங்கை சூழ்**
**ஆரைநகரில் வாழ் தேவி**
**கண்ணகை மீது செந்தமிழ் உரைக்க**
**அருள் தந்துதவு...."**

என ஆரம்பிக்கும் மன்றாட்ட அகவல் உள்ளடங்கலாக,

அம்மையின் புகழ்பாடுவதற்கு,

*"சீர்கொண்ட பாரதம ருப்பொன்றி னாலே*
*சிகரகிரி தனிலெழுது சித்திரமா முகிலே..."*

என ஆரம்பிக்கும் கல்யாணக்கால் சுற்றுக்காவியமும் இன்னோரென சில விசேட மந்திரஉச்சாடனங்கள் என பல்வேறுபட்ட தனித்துவம் வாய்ந்த பத்ததி மற்றும் இலக்கியங்கள் ஆகியவை ஆரையம்பதி கண்ணகை அம்பாளுக்கு மட்டுமே உரித்தானவையாக காணப்படுகின்றன. இவற்றை பரம்பரை பரம்பரையாக பொன்னாச்சி குடியிலுள்ள கட்டாடிமார் தங்களது தெய்வீக சொத்துக்களான ஏடுகள் மூலமாக பாதுகாத்து வருகின்றனர்.

## தெய்வம் ஆடும் முறைமை

பத்ததி வழிபாடுகளுக்கே உரித்தாகக் காணப்படும் தெய்வ அம்சங்கள் மனிதருள் புகுந்து பூசைவேளைகளிலும் வழிபாட்டு நேரங்களிலும் தங்களை நரசிம்ம காளி, வைரவர், நடனகாளி, இராமர், அனுமான் என பல்வேறுபட்ட தெய்வங்களின் பெயரால் உரு வெடுத்து ஆடும் வழக்கம் அம்பாளின் ஆலயத்தில் தொன்று தொட்டு காணப்படுகின்றது. இவர்களை உரு வேற்றும் பூசாரிகளின மந்திரங்களும் கணிர் என்ற உடுக்கையின் ஒலியும் பறைமேளமும் ஒருங்கிணைந்து காதுகளில் பக்தியின் உச்சத்தை தொட்டுச்செல்லும் ஒர் அற்புத உணர்வு சாதாரண பக்தர்களையே உருவெடுத்து உணர்விழக்கச் செய்யும் போது தெய்வ முகூர்தங்களின் அம்சம் பொருந்தியவர்கள் ஆடுவது ஒன்றும் அதிசயிக்கத்தக்க ஒரு விடயமல்ல.

உருவெடுத்து ஆடும் தெய்வங்கள், மனக்குறைகளுடன் அம்பாளின் சந்நிதியில் வந்து நிற்கும் பக்தர்களை தானாக வந்து அழைத்து வினவாமல் அவர்களின் மனக்குறைகளுக்கு தீர்வுகளை சொல்லுதல் அம்பாளின அனுக்கிரகமாகவே காணலாம். இந் நிகழ்வை 'கட்டுச்சொல்லல்' என்று கூறுவார்கள். பூசையின் முடிவில் தெய்வங்கள் மடைப்பலி, சாட்டைப்பலி போன்ற பலிகளை ஏற்றுக்கொண்டு ஆறுதலடைந்து சாதாரண நிலைக்கு திரும்பும். இதை 'மலைஏறுதல்' என அழைப்பார்கள்.

ஆரையம்பதிக் கிராமத்தின் மையப்பகுதியில் எழுந்தருளி அங்கு அருளாட்சி செய்து வருபவர் ஆறுமுகக் கந்தசுவாமி. இவ்வாலயமே கிராமத்தின் பெரிய கோயில் என்ற சிறப்புப் பெயரில் பக்தியோடு அழைக்கப்படுவதாகும். இக்கந்தசுவாமி ஆலயத்தின் மருங்காக தென் திசையில் ஆலும் அரசும் கடம்பு என்று சொல்லப்படும் வம்மி மரங்களும் திருக்கொன்றை முதலான மலர்ச் சோலையும் சூழ்ந்திருக்கும் கிராமியச் சூழலில் அமைந்த ஒரு வெண்மணற் பரப்பில் அமர்ந்திருப்பவள்தான் எங்கள் ஆரையம்பதிக் கண்ணகை அம்மன்

ஒரு காலத்தில் சுற்றிச்சூழ பல தெய்வமுகூர்த்தங்களுக்கும் தனித் தனிக் கோயில்கள் அமைக்கப்பட்டு அவை எல்லாமே ஒன்று சேர்ந்ததோர் எல்லைக் கோயிலாகக் காட்சி தந்துகொண்டிருந்தது. வடக்கே கந்தசுவாமி கோயில் அதனை அடுத்து வெளிப்பிரகார எல்லையின் வடக்கில் அமைந்த விஸ்ணு ஆலயம், வடமேற்கு மூலையில் சமாதடிப் பிள்ளையார், தென்கிழக்கில் வள்ளியம்மன் தேவஸ்தானம் என்றிவ்வாறு எங்கும் ஒரே கோயில் கூட்டம். ஆனால் அவை இன்று சிதைக்கப்பட்ட நிலையில் தடம் மாறிப்போயுள்ளன.

கண்ணகை அம்மன் கோயில் பிரகாரத்தை எடுத்து நோக்கினால் வடக்கே வைரவமூர்த்திக்கான தேவஸ்தானம் மேற்கே வம்மி மரநிழலில் இராமருக்கான தேவஸ்தானம் கிழக்கில் வீரபத்திரர் அனுமானுக்கான சிறு சிறு தேவஸ்தானங்கள் மிகவும் நேர்த்தியாகவும் கச்சிதமாகவும் பரிவார முகூர்த்தங்களாக அமைக்கப்பட்டள்ளன. வைரவர் பந்தலுக்குப் பின்புறமாக வடக்கில் நெடிது வளர்ந்து விரிந்து கிளைகள் பரப்பி நிற்கும் அரசு மரம் இதற்கு வயது குறிப்பதாக இருந்தால் ஏறத்தாள இருநூறு வருடங்கள் என்று மதிப்பிடலாம். இந்த அரசு மரத்தைச் சுற்றி அரைக்கட்டுச் சுவர் எழுப்பி பக்தர்கள் வலம் வந்து தங்கள் கடன்களைச் செலுத்துவதற்கான வசதிகள் செய்யப்பட்டுள்ளன. இங்கேதான் நாகதம்பிரானுக்கான கோயிலும் அமையப்பெற்றுள்ளது. தற்போது கோயில் பிரகாரத்தைச் சுற்றி அழகிய இரும்புக் கம்பி வேலி போடப்பட்டுள்ளது. முன்முகப்பு அழகிய சிற்பக் கலையுடனான சிகரம் எழுப்பப்பட்டு அம்மையின் அழகுச் சிலை வைக்கப்பட்டுள்ளது.

வடக்குப் பிரகாரத்தில் வைரவர் கோயிலை அடுத்து அமைந்துள்ள அரசு மரத்தின் மீது இயல்பாகவே முளைத்து வளர்ந்திருக்கும் வேம்பு என்றும் இணைபிரியாத தம்பதியினர் போல் காட்சி தருவது விசேட அம்சமே இது போன்ற தாவரச் சேர்க்கை வேறு பல ஆலய வளாகங்களிலும் காணப்படுகின்ற போதிலும் இவற்றின் தத்துரூபமான சேர்கையை ஒரு தனித்துவமாது என்றால் அது மிகையில்லை.

அரசு மரம் இந்துக்களைப் பொறுத்த வகையில் சிவனின் பிரதிவிம்பம். வேம்பு சக்தியாகிய பார்வதியின் அடையாளச் சின்னம் இவ்விரண்டும் இணையும் போது அங்கே சிவசக்தியின் அருள் மேலோங்கும் ஒரு தெய்வீக இடமாகவே கொள்ளப்படுகிறது.

இந்தச் தாவரச் சேர்கை பற்றி ஒரு மெய்ஞானத்துறவி சிலாகித்துக் கூறிய கருத்து கீழே தரப்படுகின்றன. அதிகம் பேர்களால் அறியப்படாதவராயினும் ஒரு உண்மைத் துறவியாகவும் சிறந்த தபோதனராகவும் மிளிர்ந்தவர் கல்லடி நொச்சிமுனையைப் பிறப்பிடமாகக் கொண்ட சடைச் சாமி என்றழைக்கப்பட்ட செல்லம்மா அவர்கள். இவர் பிறவியிலே சொத்து சுகம் படைத்த செல்வந்த தம்பதியினருக்கு ஒரே மகள் விவாகம் செய்து கொண்டதன் பயனாக கிடைக்கப்பெற்ற ஆண் மகவும் அற்ப சொற்ப ஆயுளிளே இறந்து போய்விடுவான் என்ற சோதிடரின் எதிர்வு கூறல் வேறு கணவன் அவ்வளவு சரியில்லாத ஒருவராகவும் இருந்தார். எது போனாலும் எதைத் தொலைத்தாலும் தன் மகனை மட்டும் இழந்து விடத் தயாரற்ற நிலையில் இறைவன் பால் அதீத பக'திப் பரவசம் பூண்டொழுகி வந்த செல்லம்மா ஆலயங்கள் தோறும் விரதமதாலான மெய்த்தவங்களை மேற்கொண்டு வந்தார். இந்த பக்தி வாழ்க்கை அவரை ஒரு மெய்ஞானத் துறவியாக்கி விட்டது. தன்னை இழந்த பரபக்தி நிலையில் பலமணித்தியாலங்கள் கூடத் தியானத்தில் ஈடுபட்டு வந்தார். ஒருமுறை ஆரையம்பதி முருகன் ஆலயத்திற்கு வந்தவர் கொடித்தம்பத்திற்கு முன்னால் அப்படியே மூச்சப் பேச்சற்று நின்றபடியே இருந்துவிட்டார். மூன்று நாட்கள் வரை அசையவில்லை ஊர்சனங்கள் ஒன்று கூடி இதனை ஓர் அதிசயமாக வேடிக்கை பார்த்தனரேயன்றி வேறு எதையும் செய்யத் துணியவில்லை கடை வியாபாரம் செய்து கொண்டிருந்த எனது பாட்டனார் மட்டும் விரைந்து

சென்று சோடாப்பானம் கொடுத்து அம்மையாரின் இக்கடும் விரதத்தை முடித்து வைத்தாராம். அன்று தொடக்கம் அவ்வம்மணி எனது பாட்டியின் நண்பியானாராம். நானும் எனது சிறிய வயதில் பாட்டியுடன் சென்று அவரைப் பார்த்திருக்கின்றேன். எப்போதும் அவர்வாயில் சிவநாமம் ஒலித்துக்கொண்டிருக்கும். ஆவ்வாறானதொரு தெய்வீக உணர்வு அவருக்கு.

இவ்வரசமரத்தின் அற்புத அமைவை உணர்ந்து அவர் பலமுறை சிலாகித்துக் கூறியிருந்தார். அதனை நான் எனது காதுகளால் கேட்டிருக்கின்றேன். "ஆலயம் நோக்கி வந்து அப்படியே பாடசாலைச் சந்தியை அடைந்த போது என் அம்மையும் அப்பனும் தங்க முத்துப் பற்களைக் காட்டி சிரிக்கிறார்கள். இத்திவ்விய காட்சியை இவ்வரசமர தபோவனத்தில் இருந்து காணப் பெற்றபோது உள்ளம் பரமானந்த மயமானது" இது அந்த அம்மையார் கூறிய தேவவாக்கு.

ஏறத்தாள 1940ம் ஆண்டுக்கு முன் சுமார் இருபத்தைந்து ஆண்டுகள் தொடர்ச்சியாக இந்தியாவின் காசி விஸ்வநாதேஸ்வரர் கோயில் உட்பட பல புண்ணிய சேத்திரங்களுக்கு கால்நடையாகவே சென்று அங்குள்ள முகூர்த்தங்களைத் தரிசித்து இலங்கை மீண்ட போது சமூகம் இவருக்கு இட்ட பட்டம் பைத்தியம் என்பது.

மட்டக்களப்பு சிவாநந்தா வித்தியாலய விளையாட்டு அரங்கிற்கு எதிர்புறமாக தற்போது 'ரேராமா 'ரே கிருஸ்ணா மையத்திற்கு ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ள நிலத்திற்கு அருகே உள்ள நாவல் மர நிழலில்தான் அவரது அந்திய காலத்தில் ஆச்சிரமம் அமைத்து வாழ்ந்து வந்தார். இவரொரு அப்பழக்கற்ற மெய்ஞானத்துறவியாவார். இரும்பு அரசர் சான்டோ தியாகராசா அவர்களின் அன்புத்தாயார்.

இதனடிப்படையில் இவ்வாலயத்தின் தலவிருட்சமாக அரசோடிணைந்த வேம்பையும் சொல்லலாம். அம்மனுக்கு அமைக்கப்பட்டுள்ள ஆலயம் அளவில் சிறியதே ஆயினும் அருளாட்சியில் பெரியது. இவ்வாலயம் ஆரம்பத்தில் களிமண் ஒலைகள் கொண்டு அமைக்கப்பட்டிருந்நதாகவும் அது 1910ம் ஆண்டில் இடம்பெற்ற பாரிய இயற்கை அனர்த்தத்தினால்

அழிபாடுற்றுப் போக 1912ம் ஆண்டில் தற்போதைய கட்டுமானம் அமைக்கப்பட்டுள்ளதாம். எனினும் அதன் மூலஸ்தானம் என்று சொல்லப்படும் கருவறையில் இதுவரை எந்தவொரு புனருத்தாரண வேலைகளும் இடம்பெறவில்லை.

ஆலயக் கட்டடத்தை இடித்து மறுசீரமைப்பதற்கு சில மக்கள் அமைப்புக்களால் எடுக்கப்பட்ட முயற்சிகள் யாவும் அம்மனின் நேரடியற்ற அசரீரி மற்றும் சங்கேத மொழிச் சமிக்ஞைகளால் கைவிடப்பட்டே வந்துள்ளன எனினும் ஆலய முன்படிக்கட்டில் இருந்து பைரவ மூர்த்தி திருப்பீடம் வரையிலான கிட்டத்தட்ட 40 அடி வரையான தூர இடைவெளி தற்போது நிலையானதும் பலமானதுமான கொங்கிறீட் தூண்கள் போடப்பட்டு மேற்கூரையும் அவ்வாறே செப்பனிடப்பட்டுள்ளது. முன்பெல்லாம் இவ்விடைவெளி வருடாவருடம் ஆராதனைக் காலத்தில் மட்டும் கமுகு, தென்னங்குருத்து, சேலைகள் முதலான சோடனைப் பொருட்களை உபயோகித்து தற்காலிக பந்தல் அமைத்தே சடங்குகள் நடைபெறும்.

2010ம் ஆண்டளவில் ஆலய முன்முகப்பில் ஆரைப்பற்றை பாகை பொது மக்கள் நிதியிலிருந்து அழகிய அலங்காரச் சிற்பத்துடன் கூடியதோர் தோரண வாயிலையும் அதன்மீது சிகர விமானத்தையும் எழுப்பியுள்ளார்கள். இது ஆலயத்தின் தோற்றத்தை கம்பீரமாக எடுத்துக்காட்ட உதவுகிறது.

கடந்த 2015ம் ஆண்டில் ஆரைப்பற்றைப் பாகை மக்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து கோயில் வெளிப் பிரகாரத்தைச் சுற்றி இரும்புக் குழாய்கள் மற்றும் தகடுகளை உபயோகித்து ஒரு ஓடுபந்தர் அமைத்து அவர்களுக்குள்ள அம்மன் பக்தியை வெளிப்படுத்தியுள்ளனர். இது வைகாசி மாத கடும் வெயில் வேளையில் கோயில் பிரகாரத்தை வலம் வந்து பணியும் பக்தர்களுக்கு ஒரு வரப்பிரசாதம் எனலாம்.

ஆரையம்பதி கண்ணகையம்மன் ஆலய மூலமுகூர்த்தம் உறையும் கருவறை, பூசை மண்டபம் அர்த்தமண்டபம் மகா மண்டபம் என்ற இரு தொகுதிகளை மட்டுமே உள்ளடக்கியது. மூலமுகூர்த்தம் வைக்கப்படுவதற்காக கருவறையில்

களிமண்ணினால் அமைக்கப்பட்ட ஒரு மேடை மட்டுமே கொண்டது. இம்மேடை யானது அம்பாள் எழுந்தருளும் பீடம் என மூன்று தளங்களைக்கொண்டு அமைந்திருப்பதுடன் ஐந்து தலை நாகம் ஒன்று பீடத்தின் பின்னால் நிழல் குடையியற்றிருப்பதாக அழகிய நாக சிற்பம் அமைக்கப்பட்டுள்ளது. ஆராதனை நாட்களான சடங்கு காலத்தில் அம்மன் பேழை பயபக்தியுடன் இப்பீடத்தின் மீதுதான் கட்டாடியாரால் ஆரோகணித்து வைக்கப்பட்டு பின்னர் கதவடைக்கும் நாளன்று பயபக்தியுடன் எளுந்தருளப்பண்ணி கந்தசுவாமி ஆலயத்தின் மூலஸ்தான அர்த்தமண்டபத்தில் வலது புறத்தில் அம்மனுக்கு என அமைக்கப்பட்ட விசேட பீடத்தில் நித்திய பூசையேற்றுவதற்காக எழுந்தருளப்பண்ணப்படும். இதே மூலஸ்தான அர்த்த மண்டபத்தின் இடது புறம் காத்தான் என்ற வேடன் வழிபட்ட வேல் முகுர்த்தம் பிரதிட்சை செய்யப்பட்டு நித்திய நேரம் தவறாமல் பூஜை செய்யப்படுவது குறிப்பிடத்தக்கது.

பூசை மண்டபம் சிறிதாக இருப்பதனால் இன்றைய காலகட்டத்தில் அது பல்வேறு வகையான பூசைப் பொருட்களையும் பிறவற்றையும் பேணிக் கையாள இடவசதி போதாமல் உள்ளது. எனினும் அம்மனின் திருவுளப்படியே எதிர்காலத்தில் இதற்கான அபிவிருத்தி வேலைகள் அமையலாம் அல்லது அமையாமலே போகலாம். எல்லாம் தேவியின் செயலே.

### உட்பிரகாரம் எங்குமே மின் விளக்குகள் எரியவிடுவதில்லை

மின்சார வசதிகள் வந்த காலத்தில் ஆலய சடங்கின்போது ஆலயத்தை மின் விளக்குகளால் அலங்கரிக்க ஆரம்பித்து ஆலயத்தின் உட்பிரகாரத்தில் மின்விளக்குகளை பொருத்தி ஒளிரவிட்ட போது அவை உடனடியாகவே செயலிழந்து போயின. மீண்டும் புதிய மின் விளக்குகளை பொருத்தி ஒளிர விட்ட போது அவ்விளக்குகளும் செயலிழந்து போயின பின்னர் இவற்றை தொடர்ந்து பொருத்தப்பட்ட மின் பிறப்பாக்கியும் செயலிழந்து போனது கண்டு அம்பாளின் ஆணையெனக் கொண்டு கருவறை அர்த்தமண்டபம் மகா மண்டபம் என்பவற்றில் எந்தவோர் மின் விளக்குகளும் எரிய விடப்படுவதிலை. எண்ணெய் விளக்குகள் மட்டுமே அம்பாளுக்கு ஏற்றி வழிபாடியற்றப்படுகின்றது இங்கு விசேட அம்சமாகும்.

மட்டக்களப்பு தமிழகம் எங்கும் நிலைபெற்றிருக்கும் கண்ணகை அம்பாள் ஆலயங்கள் ஊர் மனைகளுக்கு ஒதுக்குப்புறமாக அல்லது சனசந்ததி அற்ற இடங்களையே அமைவிடமாக கொண்டிருக்கின்றன. ஆரையம்பதியில் அமைந்துள்ள அம்பாள் ஆலயம் இவற்றில் இருந்து வேறுபட்டு ஊரின் மத்தியில் அமைந்துள்ளது என்பதும் இங்கு குறிப்பிடத்தக்கது. **1912** ஆம் ஆண்டில் ஆலயம் அமைக்கப்பட்டபோது அதனை சிறப்புற அமைப்பதற்காக அம்பாள் நடத்திய திருவிளையாடல் ஒன்றை அம்மாளின் அற்புதங்கள் என்ற பகுதியில் காணலாம்.



**கதவு திறத்தல் வைபவமும் சடங்குகள் மற்றும் ஆராதனைகள்**

"ஆரையம்பதியில் இல்லாத கோயில்களே இல்லை" இங்கு இந்துமதத்தில் கூறப்பட்டுள்ள எல்லா முகூர்த்தங்களுக்கும், அவதார புருடர்களுக்கும் கோயில்கள் அமைக்கப்பட்டுள்ளன அதிலும் பெண்தெய்வ வழிபாட்டினை எடுத்துக்காட்டும் அம்மன் கோயில்களோ ஒரே முகூர்த்தத்திற்கு இரண்டு அல்லது மூன்று என்ற பாங்கில் கூட அமைந்துள்ளதைக் காணலாம். இது சரியா ? அல்லது பிழையா? என்ற வாதம் ஒருபுறம் இருக்க அதை விடுத்து நமது பணியை இங்கு தொடருவோம்.

இத்தகைய அம்மன் கோயில்களில் முதன்மையானதாக கருதப்படும் கண்ணகையம்பாள் ஆலயம் தொன்றுதொட்டே "கதவு திறத்தல்" என்னும் ஆரம்ப நிகழ்ச்சியுடன் கூடியதான சடங்குகளைக் கொண்டதாகவே அமையப் பெற்றிருப்பினும் ஏனையவற்றிக்கெல்லாம் இல்லாத ஒரு உணர்ச்சிப் பிரவாகத்துடன் கூடிய உத்வேகத்தையும் பக்திப்பரவசத்தையும் ஆரையம்பதிக் கண்ணகையம்மன் கோயில் கதவு திறக்கும் வைபவத்தில் கண்டுணரமுடியும். அவ்வாறானதொரு எழுச்சி மக்கள் மனங்களில் இருந்து ஊற்றெடுப்பதை அவர்கள் வெளிப்படுத்தும் செயற்பாடுகள் மூலம் அறிந்து கொள்ளலாம்.

இதற்கு முன்னோடியாக வைகாசி மாதத்தில் வளர்பிறை தொடக்கத்தில் விஷ்ணு ஆலயத்தில் உருக்குமணி அம்மனுக்கு கும்பம் வைத்து ஐந்து நாட்களுக்கு சடங்குகள் நடைபெறும். இறுதி நாளன்று மணமகன் (கிருஷ்ணர்) தன் மனைவி உருக்குமணியோடு விரிசல்பட்டு வெளியேறுவதாகவும் அவரை உறவினர்கள் சமாதானம் கூறி அழைத்து வருவதாகவும் சில பாவனைகள் இடம்பெறும். இதனைத் தொடர்ந்து 'கம்சன் கதை அமுது' எனும் தொனிப்பொருளில் அன்னதான வைபவமொன்று இறுதி நிகழ்ச்சியாக இடம்பெறும். இந்நிகழ்ச்சிகள் முடிவுற்ற அடுத்த தினமே கண்ணகையம்மன் திருக்கோயில் கதவு திறக்கும் வைபவம் ஆரம்பமாகும்.

இந்த கம்சன் வதை நிகழ்வுக்கும் கண்ணகை காதைக்கும் இடையே தொடர்புகள் என்ன? இச்சம்பிரதாய சடங்குகள் இங்கு எவ்வாறு உருவாகின

என்று இதுவரை எவரும் ஆய்வு செய்யவும் இல்லை. ஆதற்கான விளக்கததினை முன்வைக்கவும் இல்லை. இருப்பினும் முன் இயலில் நாம் கூறிய எண்ணெய் வாணிபர்கள் இருவர் இறப்பிற்கும் கம்சனின் பூர்வஜென்மத்திற்கும் இடையே ஏதாவது முன்வினைத் தொடர்புகள் இருந்திருக்குமா? ஆவ்வாறாயின் ஊழ்வினைப் பயனால் கம்சனே அடுத்த பிறவியில் பாண்டிய மன்னனாகப் பிறப்பெடுத்தானா? அவனால் சிரச்சேதம் செய்யப்பட்ட எண்ணெய் வாணிவிச்சி பழிவாங்கும் விதிப்பயனுடன் அடுத்த பிறவியில் கண்ணகையாக அவதரித்தாளா? என்ற இன்னோரன்ன சந்தேகங்களுக்கு சரியான விடை காண்பதில் சிரமம் உண்டு ஆனால் ஒன்று மட்டும் உறுதியானது அதாவது எமமுன்னோர் தார்ப்பரியம் புரியாமல் கம்சன் வதை தொடர்பான அன்னதான நிகழ்ச்சியினை கண்ணகையம்மன் சடங்குகள் நடைபெறுவதற்கு முன்பதாகவே இடம்பெறச் செய்திருக்கமாட்டார்கள்.

### கதவு திறத்தல் வைபவம்

ஊரெல்லாம் ஒரே விழாக்கோலம். தூய்மையும் ஒற்றுமையும் எல்லோரும் கடைப்பிடிக்கத்தொடங்கும் காலகட்டம் மச்சம் மாமிசம் பூசிக்காமல் வணக்கம். மன்றாட்டம் என்ற பக்திநெறி ஒன்றே மூச்சாக அம்மன் சந்நிதியல் கூடும் கூட்டம் சொல்லிலடங்காது இது வெறும் பக்தியினால் ஏற்பட்ட உணர்வென்று கூற முடியாது, பயமும் பக்தியும் கலந்த ஒரு கலவை உணர்வென்பதே சரியானதாக இருக்கும்.

வைகாசி மாதம் வளர்பிறை சப்தமி திதியில் ஆலயக் கதவு திறத்தலுக்கான ஏற்பாடுகள் மேற்கொள்ளப்படும் அன்றிரவு சுமார் எட்டு மணியளவில் கதவு திறத்தலுக்கான பூர்வாங்க பூசைகள் நடைபெற்று ஆலய கட்டாடியார் (பூசகர்) அவரது உப பூசாரிமார் குழு சூழ அறங்காவல் சபையினரின் அனுமதியோடு கந்தசுவாமி ஆலய சக்தி பீடத்தில் நித்திய பூசைகளுக்காக வைக்கப்பட்டிருக்கும் அம்மன் அடங்கிய பேழையை வாய்ச் சீலை கட்டி அங்க வஸ்திர மனசுத்தியோடு கோயில் பிரதமகுருவிடமிருந்து பெற்றுக்கொள்ளுவர். பக்தகோடிகள் புடைசூழ அம்மன் பேழை கந்தசுவாமி ஆலயத்தின் உட்பிரகாரத்தை வலம் வந்து கந்தசுவாமி ஆலயத்தின் கோபுர வாசலை வந்தடையும் .

கன்னிப்பெண்களும் குடும்பப் பெண்களும் கற்பூரச் சட்டிகள் ஏந்த, முதிர்ந்த பெண்களின் குரவை ஒலி அரோகரா என்ற பக்தி பிரபாகம் ஆகியன காதைத் துளைக்க உடுக்கை ஒலியும் தண்டை ஒலியும் (சிலம்பு) இதம் சேர்க்க அம்மையின் பேழை ஆடி அசைந்து மெதுவாக ஊர்ந்து நகர்ந்து கொண்டிருக்கும் இச்சமயம் மஞ்சள் நீர் வேப்பிலைப் பத்திரத்தால் எங்கும் விசிறி எறியப்படும். அச்சமயம் கட்டாடியார் அவருக்கே உரித்தான ஆடை அணிகளோடு பேழையைத் தன் மார்போடு இறுக அணைத்து தூக்கிக் கொண்டு தன் வசம் இழந்த நிலையில் பூசாரி குழுவினரால் கைதாங்கலாக வழிநடத்தப்பட்டுக் கொண்டிருப்பார். பக்தி உணர்வை உச்சத்திறகு அழைத்துச்செல்லும் நிகழ்வாக இந் நிகழ்வு அமைந்திருப்பதை சூழ்ந்திருக்கும் யாவரும் தன்நிலை மறந்து காணப்படுவதில் இருந்து கண்டுகொள்ளலாம்

கந்தசுவாமி ஆலயப் படிக்கட்டினைத் தாண்டும் போது அம்மன் பேழையை வழிபடுவதற்காக பக்தர்கள் அனைவருக்கும் சந்தர்ப்பம் கொடுக்கப்படும். அதாவது நேர்த்திக்கடன் செலுத்தும் பெண்கள் பக்திப் பரவசத்தில் மெய்மறந்த அடியார்கள் என்ற அனைவரும் பேழையைத் தாங்கிவரும் கட்டாடியாரை அம்மனின் சொரூபமாக பாவித்து வேப்பிலை கலந்த மஞ்சள் நீரால் அவரது கால்களில் ஊற்றி பாத பூசை செய்வார்கள்.

ஆரையம்பதிக்கே உரித்தான இசைத் தாளமாக விளங்கும் பறை ஓசையும் சொர்ணாலி நாதமும் உணர்ச்சியின் உச்சதிற்கே சென்று கைவலிக்க வலிக்க வாசித்துக்கொண்டே இருப்பார்கள். பல ஊர்களில் இருந்தும் பார்வையாளர்களாக கலந்து கொள்ளும் பக்தர்களின் எண்ணிக்கை சொல்லிலடங்காது.

இறுதியாக அம்மன், கோயிலை அடைந்துவிட பேழை மீண்டும் ஒருமுறை அவ்வாலயப் பிரகாரத்தை வலம் வந்து பின்பு உள்ளே கொண்டு செல்லப்பட்டு கட்டாடியார் இருவர் மட்டுமே கர்ப்பக்கிரக பிரவேசம் செய்துபீடத்தில் ஆரோகணித்து அமர்த்துவார்கள். அம்மன் கோயில் படிக்கட்டை அடைந்தவுடன் மீண்டும் ஒருமுறை முன்பு பாதபூசை செய்யத்தவறிய பக்தர்களுக்கு அவ்வாறு தங்கள் பக்தியை நிறைவேற்றி வைக்க சந்தர்ப்பம் வழங்குவார்கள்.

அம்மனை அரியணையில் அமர்த்திய பின்பு கட்டாடியார் மனமுருகி அம்மன் மீது தோத்திரப் பாடல் ஒன்றைப் பாடி குற்றம்குறை களைந்து ஆசீர்வதிக்குமாறு வேண்டி நிற்பர். இக்கதவு திறக்கும் வைபவம் உண்மையிலேயே ஒருவரை மனநெகிழ்வடையச் செய்வதோடு பக்திப்பரவசத்தையும் ஊட்டவல்லது என்று துணிந்து கூறலாம்.

இக்கதவு திறத்தல் வைபவம் தொடர்பாக காலம் சென்ற கிராமசேவை உத்தியோகத்தரும் அம்மன் பக்தரும் அறிவுஜீவிதருமான திரு. பொன்னையா அவர்கள் தனது 'ஆரையம்பதி கண்ணகை அம்பாள்' எனற கையெழுத்துப்பிரதியில் பதிவு செய்துள்ள கட்டுரையின் ஒரு பகுதியை இங்கே மீள் பிரசுரிக்கலாம் என்று நினைக்கின்றேன்.

திருக்கதவு திறத்தல

'கண்ணகையம்மன் ஆலய வீதிகள் எங்கும் முதல் நாள் பக்தர்களால் கூட்டிப் பெருக்கி பந்தர் இட்டு புதுமணல் பரப்பி பொலிவும் அழகும் நிறைந்ததாகக் காட்சியளிக்கும். ஆலய மண்டபங்கள் அழகுபடுத்தப்பட்டு திருவலகிட்டு நீராஞ்சனம் செய்து புனிதமாக்கப்படும். திருக்கதவு திறக்கப்படும் அன்றிரவு பக்தர்கள் ஆலய வீதியெங்கும் அடுப்பு மூட்டிப் பொங்கலிடுவர். ஆலய தலைமைக் கட்டாடியார் மந்திர பூசைகளோடு முறைப்படி அம்மனுக்கு மடை வைத்து பாலாமிர்தங்களைப் படைத்து பக்தி பூர்வமாக தீப தூப நிவேதனங்களை நிகழ்த்துவர். அப்போது உடுக்கைகளை அடித்து அம்மன் காவியம், உடுகுச் சிந்து அகவல் என்பன மிகவும் பக்தியோடு பாடப்பட்டு அம்மனை வணங்கி கட்டாடியார் மூலஸ்தானத் திருக்கதவுக்கு திறப்பிட்டு திறப்பார். திறக்கும் போது ஏற்படும் ஒலியில் இருந்து பல உண்மைகள் (தெய்வ வாக்குக்கள்) புலப்படும் கதவு திறப்பதற்கு முதல் நாள் இரவில் உடுக்கு ஒலி சிலம்பு ஒலி ஆகியவற்றைக் கேட்கலாம் என்று பக்தர்கள் கூறியிருக்கிறார்கள். இவை முழுவதும் உண்மையே இச்செய்தி மூலம் அம்பாள் குடிவந்துவிட்டாள் என்பதே அவர்களது ஐதீகமாகும்.

மூலஸ்தான அறைக்கு திருவலகிட்டு மெழுகி நீராஞ்சனம் செய்து தீப தூபம் காட்டியபின் மீண்டும் கட்டாடியார் நீராடி புதிய வஸ்திரம் தரித்து திருநீறணிந்து உருத்திராட்சம் பூண்டு மெய்மறந்த நிலையில் அம்மனை

எழுந்தருளப் பண்ணுவதற்கு ஸ்ரீ கந்தசுவாமி ஆலயத்திற்குள் பிரவேசிப்பார். கந்தசுவாமி ஆலயத்தில் பூசை நடைபெற்று தீபாராதனை செய்யப்படும். அதன் பின் பிரதம கட்டாடியார் பட்டுச் சேலை உடுத்து ஆபரணங்கள் பூண்டு அம்பாளை எழுந்தருளப் பண்ணுவார். அப்போது அம்மனுக்கு முத்துக் குடை நிழற்ற, வெண்சாமரை அரற்ற கட்டாடியார் உடுகடித்து பேரொலி எழுப்பி காவியம் உடுகுச் சிந்து என்பன பாடிவர பக்தர்கள் வெள்ளம் போல் புடை சூழ பெண்களின் குரவை ஒலியும் ஆண்களின் அரோகரா ஒலியும் வானைப் பிளக்க காரிகையர் கற்பூர ஆராத்தி ஏந்தி இருமருங்கும் புடை சூழ பறை வாத்தியம் முழங்க அம்மனின் பாதங்களை மஞ்சனமாட்டி பெண்கள் பக்தி பூர்வமாக மன்றாட அம்மை நிலபாவாடை மீது பவனிவரும் காட்சி பக்திப் பரவசத்தை அளித்து மனதை கண்ணகை அம்மனிடம் பதிய வைக்குமோர் அற்புதக் காட்சியாக இடம் பெறும்'.

### சடங்குகள்

சாதாரணமாக இந்து ஆலயங்களில் நடைபெறும் நித்திய நைமித்திய காரியங்களை பூசை, திருவிழா, ஆராதனை, உற்சவம், மகோற்சவம் என்றே அழைப்பர் ஆயினும் அம்மன் கோயில்களில் இடம்பெறும் பூசை புனஸ்காரத்தை சடங்கு என்ற பெயராலேயே அழைப்பது மட்டக்களப்பு மரபாகும்.

வைகாசி முழுமதி தினத்தை இறுதி தினமாகவும் திருகுளிர்த்தி தினமாவும் அமையத்தக்கவாறு 8 நாட்களுக்கு முன் சடங்குகள் ஆரம்பமாகும். முதல்நாள் ஆரையம்பதி கண்ணகை அம்மன் ஆலயத்தில் கதவு திறந்த பின்பு அன்று அதிகாலையிலே முதலாவது சடங்கு நடைபெறும். அதைத் தொடர்ந்து மூன்று நாட்களுக்கு மாலை, அதிகாலை வேளைகளில் நாளுக்கு இரண்டு சடங்குகள் என்ற வீதத்தில் இடம்பெறும். நான்காம் நாள் அதிகாலை இடம் பெறும் சடங்கை "கதிரேசர் சடங்கு" என அழைப்பர். ஆரம்பகாலங்களில் இச்சடங்கை உபயமளித்து வந்த பெரியவர் கதிரேசர் அவர்களின் பெயரால் அழைக்கப்படும் இச்சடங்கு அவரது வழித்தோன்றல்களால் தற்போதும் உபயமளிக்கப்படுகின்றது.

## கல்யாணச்சடங்கு

ஐந்தாம் நாள் சடங்கு கண்ணகைக்கும் கோவலனுக்கும் திருக்கல்யாண வைபவத்தை வெளிப்படுத்துமோர் நிகழ்வாகவே அமைந்திருக்கும். அன்று சாயங்காலம் அம்மன் எழுந்தருளப்பட்டு வடக்கு நோக்கிச் சென்று அங்கு ஓர் வசதியான இடத்தில் வளர்ந்து நிற்கும் நேரான தடியை (பூவரசு மரத்தடியைத்) தேவராளர் தெரிவு செய்ய அதனை வெட்டி எடுத்து வந்து "கல்யாணக்கால்" என்று யாக மண்டபத்தில் நிறுத்தி சேலைகளாலும் சோடனைப் பொருட்களாலும் அலங்கரிப்பார்கள். கல்யாணக்கால் வெட்டச் செல்லுதல் ஊர்சுற்றச் செல்லுதல் ஆகிய நிகழ்வுகளின் போது முகக்களை அடங்கிய கும்பம் மட்டுமே எடுத்துச் செல்லப்படும்.

கல்யாணச் சடங்கன்று ஊர்மக்களில் பெரும்பாலானோர் ஒவ்வொருவரும் தத்தமது வீட்டில் கல்யாணப்பலகாரம் அதாவது அதிரசம் என்று வேறு இடங்களில் சொல்லப்படும் சக்கரைப் பலகாரம் ஒற்றைப்படை எண்ணிக்கையில் செய்து எடுத்துக் கொண்டு பூசைக்கான பழம் பாக்கு வெற்றிலை மற்றும் அபிசேடப் பொருட்களுடன் கூடிய காணிக்கைப் பொருட்களையும் கொண்டு வந்து கொடுப்பார்கள். அவற்றைப் பெற்றுக்கொண்ட கோயில் நிருவாகம் வெறும் பாத்திரங்களைத் திருப்பிக் கொடுக்காமல் தமிழர் பண்பாட்டிற்கேற்ப அம்மனுக்குப் படைத்த ஏதாவது நைவேத்தியப் பொருட்களை பிரசாதமாக வைத்தே அனுப்புவர் மகிழ்ச்சியோடு பெற்றுக்கொள்ளும் சிறார்கள் குதுாகலத்தில் திளைப்பர். திருநீறு, சந்தனம், குங்குமம் என்ற பிரசாதம் வழக்கமானவை. ஊர் முழுவதும் அன்று ஒரு கலியாண வீடு போல எல்லோரும் பரபரப்பாகவும் உற்சாகமாகவும் செயல்படுவதைக் காணலாம். சிறுவர்கள் கூட தூங்கிவிடாமல் விழித்திருந்து அம்மையின் விவாக ஏற்பாடுகளில் பங்குகொள்வர். இது பற்றி திரு. பொன்னையா அவர்கள் இவ்வாறு கூறுகிறார்.

"கதவு திறந்து ஐந்தாம் நாள் கல்யாணக்கால் வெட்டுவதற்கு மடைப்பெட்டி எடுத்து மேற்கட்டியுடன் மங்கள வாத்தியம முழங்க தேவாதிகள் உருவேறி ஆட ஊர்சுற்றிக் காவியம் படித்து உடுகடித்து கட்டாடியார் சகிதம் ஆலயத்தில் இருந்து புறப்பட்டு வடக்கு நோக்கி வருவர். (கண்ணகை தெற்கில் இருந்து வடக்கு நோக்கி வந்தவள் என்பதற்காக இம்முறை

பின்பற்றப்படுகின்றதாம்.) வழிநெடுகிலும் மக்கள் இடத்தூய்மைப்படுத்தி நீர் தெளித்து குத்துவிளக்கேற்றி நீர்குடம் மஞ்கள் வேப்பம் பத்திரம் ஆகியன வைத்து வரவேற்பார்கள். தூய்மையான இடத்தினில் வளர்ந்த பூவரச மரத்தடியில் மடைவைத்து தூப தீபம் காட்டி ஆராதனை செய்து காப்புக்கட்டி கல்யாணக் காலுக்கான கம்பத்தை அம்மரத்தின் நேராக வளர்ந்துள்ள ஒரு கம்பைப் பார்தது வெட்டுவர். நிலத்தில் விழாதவாறு தேவாதிகள் கம்பைத் தாங்கிப்பிடிக்க அளவுக்கு வெட்டித் துப்பரவு செய்து அதனை நீராட்டி திருநீறு மஞ்சள் சாத்தி வெண்துகில் புனைந்து மங்கள வாத்தியத்துடன் காவியம் பாடி உடுகடித்து அம்மன் ஆலயம் நோக்கி எடுத்து வரும் காட்சி மனதைவிட்டு நீங்காது.

கலியாணச் சடங்கு அன்று ஆலய வீதிகள் எங்கும் விசேட பந்தரிட்டு அலங்கரிக்கப்பட்டு மின்னொளி பூட்டி மணவாட்டியின் ஆலயம் கோலமின் குமிழ்களாலும் ஒளியூட்டப்பட்டு இந்திரலோகம் போல் காட்சிப்படுத்தப்படும். அன்றைய இரவு ஆலய மண்டபத்தின் நடுவில் கல்யாணக்கால் நடப்பட்டு பட்டுச் சேலைகளினால் அடுக்கிச் சாத்திக்கட்டி அணிகலன் பூட்டி அலங்கரித்து, ஒரு மணப்பெண் போல் கோலம் செய்வர் அன்றிரவு கலியாண கூறைதாலியுடன் ஆரைப்பற்றை தெருப்பாகை மக்களால் கூறைதாலி எடுத்துவரும் வைபவம் மிகவும் விமர்சையாக இடம்பெறும் மேளதாள வாத்தியம் முளங்க கூறைதாலித் தெம்மாங்கு மெட்டுப்பாடலொலி பக்திப்பரவசமூட்ட, பலகாரப்பெட்டிகள் சகிதம் ஆலயடி வைரவர் கோயிலில் இருந்து ஊர்வலமாக எடுத்து வந்து கண்ணகையம்மன் ஆலயத்தில் கையளிப்பர்.

நடுநிசி முகூர்த்தத்தில் ஆரம்பமாகும் கலியாணச் சடங்கின் போது விசேட கும்பங்கள் மடைகள் என்பன முறைப்படி மந்திர உச்சாடனங்களுடன் வகைப்படும் நிவேதன பொருட்களான பலகார வகைகள் பழவகைகள் பாணக்கம் இளநீர் கரும்பு என்பன வைக்கபட்டு சம்பிரதாய முறைப் படி பொன்னாச்சி மரபுக் கட்டாடியார் விசேட ஆராதனை செய்து நிவேதனச் சடங்கை நிகழ்த்துவர்.

கல்யாணச் சடங்கின் போது கல்யாணக்கால் ஊர்சுற்றுக் காவியம் விசேடமாக பாடப்பட்டு உடுகு பம்பை ஆகிய முரசொலி அதிர, கன்னிமார் ஆராத்தி எடுக்க சிறுமியர்கள் அம்மானைக் காய் கிலுக்கி சிலம்பொலி அலம்ப அரிவையாரின் குரவை பேரொலிக்க ஆலய வீதிகளில் மங்கள வாத்தியங்கள் முழங்க சடங்குப் பெருவிழா இனிது நிறைவெய்தும். "

### கப்பல்காரர் சடங்கு

காவியக் கண்ணகை சரிதத்தில் மீகாமன் என்றொரு வீரமகனின் கதை முக்கிய இடம் பெறுகின்றது. மீகாமன் என்றழைக்கபட்ட சௌந்திரீகனால் முக்குக அரசர்களான வெடியரசன், வீரநாரணன், விளங்குதேவன் என்பவர்களுடன் போர்புரிந்து கண்ணகையின் காற்சிலம்பினுள் வைப்பதற்கான நாகமணியை கொணர்ந்து கொடுத்த அம்மரகதமணிக்கும் மீகாமனுக்கும் முக்கிய இடம் உண்டு இத்தகைய சிறப்பு பெற்ற இத்தகைய காற்சிலம்பே கோவலன் கண்ணகை ஆகியோரின் திருமணத்திற்கு மட்டுமல்ல கோவலனின் மரணத்திற்கும் காரணமாக அமைந்திருந்தது. குற்றமேதும் செய்யாத கோவலனைக் கொடு மழுவால் கொல்லுவித்த கொற்றவன் பாண்டியனின் சாவுக்கும் அதுவே காரணமாக அமைந்திருந்தது. நீதி கேட்டு வழக்குரைத்த கண்ணகைக்கு வெற்றியைப் பெற்றுக்கொடுக்கவும் அதுவே காரணமாயிருந்தது. இப்பரல்கள் கொண்ட சிலம்பு கண்ணகையின் கால்களுக்கு அணிசெய்யத் தவறியிருப்பின் சிலப்பதிகாரம் என்ற காவியம் கூட இல்லை இத்தகைய மகத்துவம் வாய்ந்த சிலம்பிற்கு மீகாமன் சௌந்திரீகனின் முயற்சி இன்றேல் அது முழுமைபெற்றிருக்காது. அந்த வகையில்தான் இதனை நினைவு கூரும் வகையில் ஆறாம் நாளில் கப்பல்காரர் சடங்கு இடம்பெறுகின்றது.

### பச்சை கட்டிச்சடங்கு

இறுதியானதும் முடிவானதுமான ஏழாம் நாள் சடங்கு பச்சை கட்டி என்று அழைக்கப்படுகின்றது. இதன் தாற்பரியம் என்ன என்று உணரப்படாத போதிலும் இச்சடங்கின் போது அம்மனுக்கு நிவேதனமாகப் படைக்கப்படும் பழவகைகள் யாவும் கனியாத காய்ப்பருவம் கொண்டவைகளாகவே இருக்கின்றன. இதனால் இச்சம்பிரதாய பூர்வமான செயற்பாட்டில் வேறேதும் முக்கிய கருப்பொருள் மறைந்திருக்க வேண்டும் என்பது எனது துணிவு

கோவலன் வெட்டுண்டு இறப்பதற்கு முன்பு இடைச் சேரியில் தங்கியிருந்த கற்பரசி கண்ணகைக்கு அவளது திண்மையினால் சில துர்நிமித்தங்கள் ஏற்படுவதற்கான சகுனங்கள் தென்பட்டனவாம் அவற்றில் பூக்கள் வாடியும் பழங்கள் கனிவை அடையாமலும் பால் தயிர் என்பன உறையாமலும் இருந்ததாகக் கூறப்படுகின்றதல்லவா? அத்துர்க்குறிகளை ஏற்படுத்தி கண்ணகையை விழிப்புறச் செய்யுமோர் பாவனையாகவே ஏழாம் நாளில் பச்சை கட்டிச் சடங்கு பழுக்காத பழவர்க்கங்களுடன் கூடிய விழாவாக கைக்கொள்ளப்பட்டு வருவதாக எண்ணுவதற்கு ஏதுக்களாக அமைகின்றன.

மேற்படி கப்பல்கார சடங்கு மற்றும் பச்சைகட்டி சடங்கு என்பவற்றை முன்னின்று நடத்தும் குழுவினர் கப்பல்காரர் மற்றும் பச்சைகட்டிக்காரர் என அழைக்கப்படுகின்றனர். இக்கிராமத்தில் உரிமைகள் முழுவதும் தாய்வழி பரம்பரைசார்ந்ததாகவே கைமாறப்படுகின்ற நடைமுறைகாணப்படுகின்றதாக இருப்பினும் இவ் இரண்டு சடங்கு உரிமைகளும் தந்தை வழி சந்ததிக்கே கைமாறப்படுகின்றது என்பதும் இங்கு வழமையில் இருந்து மாறுபட்ட விடயமாகின்றது.

### கும்பம் ஊர்சுற்றுதல்

கல்யாணச் சடங்கை அடுத்து இடம்பெறுகின்ற கப்பல்காரர் சடங்கின் அன்றும் பச்சைகட்டி சடங்கின் அன்றும் அதிகாலையில் எழுந்தருளப்பண்ணப்பட்டு இருக்கும் அம்பாளின் கும்பம் முதலானவற்றோடு தேவதாதிகள் புடைசூழ உப பூசாரிகளின் அனுசரணையுடன் ஊர்முழுவதும் சுற்றி வருவதற்காக எடுத்துச் செல்லப்படும் அச்சமயம் ஊர்ச்சனங்கள் கும்பம் வரும் பாதை வழி முழுவதும் வீட்டுக்கு வீடு நிறை கும்பம் வைத்து தண்ணீர் சொரிந்து விபூதி சந்தனம் குங்குமம் மஞ்சள் என்பன வைத்து வரவேற்பார்கள். சில இடங்களில் பந்தல் அமைத்து அம்பாளை வரவேற்பார்கள். கண்ணகை அம்பாள் கும்பத்தை வரவேற்க காவல் தெய்வங்களுக்கு என ஏற்படுத்தப்படும் தற்காலிக பந்தல்கள் பலதும் நாளடைவில் சிறு கட்டடமாகி பின்னர் தற்போது பெரிய அளவிலான கோயில்களாக இக்கிராமத்தில் வளர்ச்சி பெற்றிருப்தே அதே ஆலயங்களின் ஆரம்பம் என்பதுதான் யாரும் மறுக்க முடியாத யதார்த்தமாகும்.

ஊரில் உள்ள துட்ட தேவதைகள், நோய்நொடி, கெட்ட சகுனங்களில் இருந்து ஊரைகாத்து சுத்தப்படுத்துவதற்காக அம்பாள் கும்பம் ஊர்சுற்றி வருகின்றது என சொல்லப்படுகின்றது.

### காவடிகளும் நேர்த்திக் கடன்களும்

திருக்கதவு திறந்ததன் பிற்பாடு இரண்டாம் நாள் சடங்கு தொடக்கம் இறுதி நாள் நிகழ்ச்சியான குளிர்த்தி வைபவம் வரை பக்தர்கள் தங்கள் நேர்த்திக் கடன்களையும் பக்தி உணர்வினையும் பறவைகாவடி, முள்ளுக்காவடி பால் காவடி என காவடிகள் எடுத்தும் ஆடு, கோழி, தங்கம் அல்லது வெள்ளியினால் செய்யப்பட்ட அடையாளப் பொருட்கள் என்பவற்றையும் அத்தோடு சேலைகள் கமுகம் பிள்ளை தென்னம் பிள்ளை என்பவற்றையும் கொண்டு வந்து கோயிலில் கொடுத்து தங்களின் குறை நீக்கிய அம்பாளுக்கு நேரத்தியை நிறைவேற்றி வணங்கி நிற்பர். இவ் நேர்த்திகடன்களை இந்துக்களால் மட்டுமன்றி அயல் கிராமங்களில் வதியும் இஸ்லாமியர்களும் கொடுப்பதும், அம்பாளின் ஆலயத்திற்கு வந்து வணங்கி நிற்பதும் இங்கு நித்தமும் நடக்கும் நிகழ்வுகள்.

### கோவலன் கதைப் படிப்பு

அம்மன் கோயிலில் கதவு திறந்து அடுத்த நாள் காலை தொடக்கம் ஏழாம் நாள் சடங்கு வரையான காலப்பகுதியில் சிறிய படிப்பு மேசை போட்டு தேங்காய் எண்ணெய்கள் குத்து விளக்குகள் தீபமேற்றி கோவலன் கதை என்றும் கண்ணகை காதை இசை ராகத்துடன் பாடப்படும். நல்ல குரல் வளமும் பக்திப்பரவசமும் கொண்ட அன்பர்கள் சிலர் முன்வந்து இக்கோவலன் கதை என்ற வரலாற்று அகவலை அதற்கே உரித்தான இராக பாவங்களோடு பாடுவர். ஒரே சமயம் இருவர் இணைந்து ஆனால் ஒருவர் பாடி முடிய மற்றவா "நன்னே நன்ன நானே நன்ன.... நானே நன்ன நானே நன்னனா....." என்ற மெட்டுக்கமைய பாங்கில் பாடுவார்கள். ஒருவர் ஓரடியைப் பாடி முடிக்க அடுத்தவர் இடைவிடாது ஆ...ங் .... என இழுப்பு ஆலாபனை இராகத்தோடு தொடங்கி அடுத்த அடியைப் பாடிமுடிபபார். இது செவிகளால் கேட்பதற்கு இதம் தருவதோடு கண்ணகையின் பூர்வாங்க சரித்திரமும் மனதில் படியும்படி அமைந்துவிடும்.

சிலப்பதிகாரம் தரும் கோவலன் கதைக்கும் இங்கு படிக்கபடும் ஏடுகளில் கூறப்படும் கதைக்கும் இடையே சில வேறுபாடுகள் உள்ளன.

### திருக் குளிர்த்தி வைபவம்

கண்ணகை வரலாற்றில் வழக்குரைக் காதை எவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்ததோ அதே போன்று கண்ணகை அம்மன் உற்சவத்தில் திருக்குளிர்த்தி வைபவமும் முக்கியத்துவம் பெறுகிறது. ஊர்கள் தோறும் தேவிக்கு கோயில் அமைத்து பக்தர்கள் எல்லோரும் ஒருமுகமாக வணங்கி ஆசிபெறும் நோக்கில் மையத்தளமாகவே இக்குளிர்த்தி இடம்பெறுகிறது. கோடை காலத்தில் தோன்றிப் பரவும் கொடிய நோய்களான வைசூரி, பேதி, அம்மை போன்ற பிணிகள் ஏற்பட்டு மக்களைப் பாதிக்காமல் இருக்க வேண்டும் என்ற ஒருவித அச்ச உணர்வாகவே இவ்வம்மன் வழிபாடு ஏற்பட்டதென்றால் மிகையாகாது இதற்கு ஆதாரமாக திருக்கோயிலிலே பூசை முடிவில் மக்களுக்கு வழங்கப்படும் பிரசாத வகைகள் அமைகின்றன. இங்கு தாராளமாக உபயோகிக்கப்படும் வேப்பிலை, மஞ்சள், வெண்காயம், முக்கனிகள், கரும்பு, இளநீர் என்பன எல்லாமே இந்த வைரஸ் கிருமிகளை பரவவிடாமல் தடுக்கும் முகிலிகள்தான் என்று சித்த ஆயுர்வேத விற்பனர்கள் கருத்து தெரிவிக்கின்றனர்.

ஆரையம்பதி கண்ணகையம்மன் திருக்கோயிலில் இறுதி நிகழ்வாக இடம்பெறும் குளிர்த்தி வைபவம் மற்றும் கதவடைத்தல் நிகழ்வு தொடர்பாக திரு.பொன்னையா அவர்கள் குறிப்பிடுவதனை இங்கே அப்படியே வழுநீக்கித் தருகின்றேன்.

குளிர்த்தி நாளன்று ஆலயத்தை சுற்றி விசேட பந்தரிட்டு விமானம் அமைத்து (மேற்றளம்) வீதியில் மகரதோரணமிட்டு மின்னலங்காரம் செய்து அழகும் கவர்ச்சியும் ததும்ப சோடிக்கப்பட்டிருக்கும் பிரதான வாசலில் கோபுரம் போல் தளமைத்து சப்பிரத் தூண்களிட்டு (தற்போது நிரந்தர கோபுர வாயிலாக நிருமாணிக்கப்பட்டுள்ளது) இருமருங்கும் யாழிகள் புடைசூழ வனப்புடன் திகழும் காட்சி கண்ணையும் கருத்தையும் கவரக்கூடியதாக இருக்கும்.

அன்று பின்னேரம் வரை தொடர்ந்து காவடி ஆட்டங்களும் அங்கப் பிரதட்சனங்களும் அதிக அளவில் இடம்பெறும் நேர்த்திக் கடன்

காணிக்கைகள் மடைப்பெட்டிகள் என்பன வந்து குவிந்த வண்ணம் இருக்கும் அன்றிரவு நடைபெறும் சடங்கில் பொங்கலிடுதல் முக்கிய நைவேத்தியமாக அமையும். நடுநிசியில் விநாயகப் பானை அடுப்பில் ஏற்றப்பட்டதும் ஆலயத்தைச் சூழவுள்ள நிலப்பரப்பெங்கும் தங்கள் தங்கள் பொங்கல் அடுப்புக்களை மூட்டுவர். விநாயகப் பானை பொங்கி ஆலயத்தைச் சுற்றி எழுந்தருளப்பட்ட பின் பூசை ஆரம்பமாகும்

பாலுடன் சக்கரை இளநீர் தோடம்பழம் மாதுளம்பழம், மாம்பழம், வாழைப்பழம் கருப்பம் சாறு, தேன், நெய், வெண்காயம் முதலான பூசைத் திரவியங்கள் கலக்கப்பட்டு இனிமையும் குளிர்மையும் நிறைந்த அமிர்தம் போன்ற பானம் தயாரிக்கப்பட்டு பெரிய கலசத்தில் இட்டு வெண்துகில் மூடி குளிர்த்தி ஆடுவதற்கான விசேட பந்தலில் வைக்கப்படும். இதனை பாணக்கம் என்றும் அழைப்பர் விசேட தீபாராதனையின் பின் தலைமைக் கட்டாடியார் பட்டாடை புனைந்து அணிகலன் பூண்டு உருத்திராக்கம் அணிந்து விபூதி தரித்து வேப்பம் தளிரும் வெள்ளிப்பிரம்பும் கைப்பிடித்து அம்மனை மார்பில் ஏந்தி மெய்மறந்து நின்று தேவாதிகள் உருவேறி சிலம்பொலி அலம்பி நடனமாட, பாவணர் காவியம பாட, உடுக்கு மத்தளம் தவில் பேரிகை முழங்க, பக்தர் குழாம் புடைசூழ பெண்கள் குரவையிட கன்னிமார் ஆராத்தி எடுக்க, சிறுமியர்கள் அம்மானைக்காய் கிலுக்க, கற்பூரச்சட்டி ஏந்தி காரிகையர் பவனிவர, செங்கோல் நடாத்த சாமிரமிட முத்துக்குடை நிழற்ற, தளப்பத்து ஓலை கவிக்க நிலபாவாடை மீது அம்மன் படியிறங்கி, குளிர்த்தி ஆடவரும் காட்சியானது பார்போரைப் பரவசத்தில் ஆழ்த்தி உள்ளம் உருகி மெய்நடுங்கி மகிழ்ச்சி வெள்ளதத்தில் ஆழ்த்திவிடும். அம்மனின் அருள் அமுதத்ததை பருகி நிலைநிறுத்தும் கட்டாடியார் திருக்குளிர்த்தி ஏட்டை பாடக் காத்திருக்கும் ஆரைப்பற்றைதெருப்பாகை, நடுத்தெருப்பாகை, வேளாளர்தெருப்பாகையைச் சேர்ந்த பக்தர்களிடம் ஆண்டுக்கொருமுறை இம் மூன்று தெருவினருமே மாறி மாறிக் கொடுக்க அவர்கள் பக்தியோடு அதனைப் பெற்று காப்பு பாடிய பின்

"காரணியும் கொடை வாழ் வணிகர்
காதல் மிகுநததோர் கோவலனார்
சீரணியும் திருமாமணி நங்கை
செல்வி உலகுய்யத் தோன்றினாளே..."

என்று தொடங்கி கண்ணகை வரலாற்றினை இருவர் மாறி மாறி இனிய குரலில் இதமாகப் பாடுவார்கள்.

இறுதியாக அமைந்த பாடல்களில் அம்மனைக் குளிர்ந்தருளும்படி இரங்கி விண்ணப்பம் செய்வர் இவ்வாறு,

"மீகாமனுக்கு மிகுந்த வரந்தான் கொடுத்து
நாகமணி வாங்க நயந்தாய் குளிர்ந்தருள்வாய்
சர்ப்பமணித் தாளணிந்த தாயே குளிந்தருள்வாய்
தென்னம் பழம் சொரிய தேமாங்கனி உதிர
வன்னி வழி நடத்த மாதே குளிர்ந்தருள்வாய்..."

வாழி பாடி முடிந்ததும் பக்தர்களுக்கு குளிர்த்தி பிரசாதம் வழங்குவார்கள்

### திருக்கதவடைத்தல்

திருக்கதவு திறப்பதற்கு என்ன என்ன வழிபாட்டு முறைகளோடு கூடிய மரபுகள் பின்பற்றிப்பட்டனவோ அதே போன்று திருக்கதவு அடைத்தல் வைபவத்திற்கும் அத்தனை விடயங்களும் பேணப்படும். சிலர் அம்மனை அழைத்துச் செல்லுதல் என்ற பெயரில் பொங்கலிட்டுப் படைப்பார்கள் அம்மன் அடங்கிய பேழையை மீண்டும் கந்தசாமி ஆலய நைவேத்திய பீடத்தில் கொண்டு சென்று அமர்த்தி விட்ட பின்பு கட்டாடியார் படிக்கட்டுப் பூசை செய்து கதவைத் தாளிடுவார். பின்னர் வைரவருக்கு சிறப்பு படையல் இடம்பெற்று இனிதே நிறைவுபெறும். இறுதி நிகழ்வாக, ஆலய கட்டாடியாரை, அறங்காவலர்கள் மற்றும் பொதுமக்கள் ஒன்று கூடி கட்டாடியாரின் வீடுவரை அழைத்துச்சென்று வழியனுப்பி வைப்பர்.

## எட்டு நாட்கள் நடைபெறும் சடங்குகளும் உபயகாரர்களும்

| நாள் | சடங்கு நிகழ்வுகள் | உபயம் |
|---|---|---|
| 1 ஆம் நாள் | • முன்னிரவு விசேட பொங்கல் பூசைகளுடன் அம்பாளின் திருக்கதவு திறத்தல்.<br>• அம்பாளை ஸ்ரீ கந்தசுவாமி ஆலயத்தில் இருந்து அழைத்து வரும் நிகழ்வு | பொதுமக்கள் |
| 2 ஆம் நாள் | • அதிகாலை சடங்கு | வைத்தியர் மு.மாசிலாமணி குடும்பத்தினர் |
| | • மாலைச்சடங்கு | கண்ணகை அம்பாள் ஆலய கட்டாடிமார் |
| 3 ஆம் நாள் | • அதிகாலை சடங்கு | சேர்மன் சாமித்தம்பி குடும்பத்தினர் |
| | • மாலைச்சடங்கு | திரு.முத்துலிங்கம் கிருஸ்ணபிள்ளை குடும்பத்தினர் |
| 4 ஆம் நாள் | • அதிகாலை சாமித்தம்பியார் சடங்கு | சாமிதம்பியார் பரம்பரையினர் |
| | • மாலைச்சடங்கு | திரு.பூ.தயாபரன், திரு.சு.நேசசிறி குடும்பத்தினர் |
| 5 ஆம் நாள் | • அதிகாலை கதிரேசர் சடங்கு | கதிரேசர் பரம்பரையினர் |
| | • மாலை திருகல்யாணக்கால் வெட்டுதலும்<br>• முன்னிரவு ஆலையடி ஆதிவைரவர் ஆலயத்தில் இருந்து ஆரைப்பற்றைத் தெரு மக்களால் கூறைதாலி கொண்டு வரும் வைபவம் | பொதுமக்கள் |
| 6 ஆம் நாள் | • அதிகாலை சடங்கு திருக்கல்யாணச்சடங்கு | பொதுமக்கள் |
| | • மலைச்சடங்கு | திரு.வே.பூபாலபிள்ளை, திரு.தி.அஜந்தன் குடும்பத்தினர் |
| 7 ஆம் நாள் | • அதிகாலை சடங்கு – கப்பல் காரச்சடங்கு | கப்பற்கார மக்கள் |
| | • மாலைச்சடங்கு | திருமதி.சின்னம்மா நல்லதம்பி குடும்பத்தினர் |
| 8 ஆம் நாள் | • அதிகாலை சடங்கு – பச்சைகட்டி சடங்கு | பச்சைகட்டி மக்கள் |
| | • பின்னிரவு விநாயகர்பானை எழுந்தருளப் பண்ணல்<br>• விசேட பூசைகளுடன் ஆதிபராசக்தி அன்னைக்கு திருக்குளிர்த்தி வைபவம் | பொதுமக்கள் |
| 9 ஆம் நாள் | • முன்னிரவு அம்பாளை ஸ்ரீ கந்தசுவாமி ஆலயத்திற்கு அழைத்து சென்று எழுந்தருளப்பண்ணல்<br>• விசேட பொங்கல் பூசைகளுடன் திருக்கதவடைத்தல் | பொதுமக்கள் |
| | • விசேட வைரவர் பூசை | திரு.க.இளையதம்பி கண்ணகையம்மன் ஆலய பிரதம கட்டாடியார் |

மேற்படி சடங்கு மற்றும் உபயகாரர்களின் விபரங்கள் 2016 ஆண்டு இடம்பெற்ற உற்சவத்தை அடிப்படையாக கொண்டது.

ஆரையம்பதி கண்ணகை தேவி அடியவர்களின் குறை கேட்டு இரங்கி பல அற்புத லீலைகளைப் புரிந்திருக்கிறாள். அவள் புரிந்து வரும் அற்புதங்கள் அனைத்தையும் பட்டியல் போடடுக் காட்டும் நிலையில் நாமில்லை. அதற்கு எமக்கு அருகதையும் இல்லை அறிவும் போதாது பக்தர்களுக்கும் அவளுக்குமிடையே எத்தனையோ பிணைப்புக்கள் ஏற்பாடுகள் நிகழ்ந்திருக்கலாம். அவற்றையெல்லாம் சம்பந்தப்பட்டவர்களும் அம்மையுமே அறிய வல்லார்கள். பொதுவாக இங்கு நிகழ்ந்தவைகளாக கூறப்படும் அவளின் அற்புதங்கள் சிலவற்றை மட்டும் நாம் பகிர்ந்து கொள்வோம்.

### பழுதடைந்த ஆலயத்தை
### புனரமைக்க அம்மன் கொடுத்த அருள்வாக்கு

1910 ஆம் ஆண்டளவில் எற்பட்ட இயற்கை அனர்த்தத்தால் அம்பாளுக்கு களிமண்ணாலும் ஒலையாலும் கட்டப்பட்டிருந்த ஆலயம் பாரிய சேதத்துக்குள்ளாயிருந்தது. இதை மீண்டும் புனரமைத்து கற்கோயில் ஒன்று ஊர்மக்கள் ஒத்துழைப்புடன் ஆலய வண்ணக்கர்கள் மேற்கொண்டு வந்தனர். அவ்வேளையில் ஆலயத்தின் கணக்குப்பிள்ளையாக இருந்த சின்னவாத்தியார் தனது வயலில் சூடு போடுவதற்காக வயல் வாடியில் தங்கியிருந்து தனது வயல் வேலைகளை கவனித்தார். அதில் ஒருநாள் அவர் ஆழ்ந்த உறக்கத்தில் இருந்த போது அம்பாள் கனவில் தோன்றி “நான் அங்கு மழையில் நனைகின்றேன் நீ இங்கு தூங்குகின்றாயா ? “பொலி பொலியும் எனக்கு மழை ஒழுகாது வழி செய்” என கூறி மறைந்தார். திடுக்கிட்டு எழும்பிய கணக்குப்பிள்ளை சூடு போடும் இடத்தை சென்று பாத்தவர் திகைத்துவிட்டார். பொலி தூற்றிய நெற்குவியல் நிரம்பி அதிகமாயிருக்க கண்டார். வயலில் என்னவாவது நடந்தேறட்டும் என எண்ணி உடனே வயல்விட்டு நீங்கி ஊருக்கு வந்து வண்ணக்கர் மற்றும் ஊராரிடம் தனக்கு அம்பாள் கனவில் தோன்றியதை விபரித்து ஆலய வேலைகளை துரிதமாக மேற்கொள்ள தனது முழுப்பங்களிப்பையும் கவனத்தையும் செலுத்தி ஆலயத்தை செவ்வென கட்டுவிப்பதில் தன்னை ஈடுபடுத்திக்கொண்டார். அங்கு வயல் வேலைகள் இவரது மேற்பார்வை இல்லாமலே நடந்தேறியது. விளைச்சல் அந்தவருடம்

வழமையை விட பன்மடங்கு அதிரிகரித்திருந்தது என்பதை அம்பாள் நடாத்திய திருவிளையாடல் இல்லாமல் வேற என்னவென்று சொல்வது.

### அம்பட்டப் புலவனைப் பாடவைத்து பத்தக் கட்டாடியாருக்கு தீட்சை அளித்த தாய்

ஆலய அறக்காவலர்களாலும் கிராமத்துப் பொது மக்களாலும் ஒரு சேர பக்தக் கட்டாடியாரே பொருத்தமான பூசகர் என்று தேர்ந்தெடுக்கப்பட்ட நிலையில் அதனை மீற முடியாமல் திண்டாடிய அவர் இறுதியில் கடமைகளை ஏற்றுக் கொண்டார். கட்டாடியாருக்கோ பூசை செய்யும் விதிமுறைகள் அதற்கான பரீட்சயம் என்று எதுவும் அறியப்படாதவராக இருந்தார். ஒரு சாதாரண பக்தனைப் போன்றே நிவேதனப் பொருட்களை மடையில் கொட்டிக் குவித்து மன,மொழி,மெய்களால் இறைஞ்சித் துதித்து படைத்து வந்தார்.

இருப்பினும் அவருக்கே தன் செய்கைகளில் திருப்தி அடைய முடியவில்லை இது இவ்வாறிருக்க அம்பட்டப் புலவன் என்றழைக்கப்பட்ட ஒரு மந்திரவாதி கட்டாடியாரை எப்போதும் ஏளனமாகக் கருதி அவர் செய்து வரும் பூசைகளின் நடுவே குழப்பத்தை உருவாக்கிக் கொண்டே வந்தான். தேவராளர்களை ஆலயத்தில் தலை சுற்றி ஆடாதவாறு மந்திரதந்திரங்களால் கட்டுவது வினாயகப் பானையை அரைவேக்காட்டில் உடைப்பெடுக்க வைப்பது என்றிவ்வாறு எண்ணற்ற பல விசமப் பரீட்சைகளை அவன் உருவாக்கி வந்தான். இத்தனைக்கும் அவன் அம்மையைப் போற்றிப் பாடுவதோ இருகரம் கூப்பி தொழுவதோ கிடையாது அத்தனை மமதையும் செருக்கும் அவனுக்கு.

இவை அனைத்தையும் கட்டாடியாரால் சகித்துக் கொள்ள முடிந்த போதிலும் அன்னையை இருகரம் கூப்பி தொழாத அவனது இறுமாப்பை அவரால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை அவனின் இச்செயல் கட்டாடியாரை என்னவோ செய்தது. இறுதியில் கட்டாடியார் தீர்மானம் ஒன்றை மேற்கொண்டார்.

புலவன் அம்மையின் சந்நிதானத்தில் இருகரங்களையும் இணைத்து வணங்காவிட்டால் தான் தொடர்ந்தும் பூசை செய்வதில்லை என்ற

சங்கல்பமே அதுவாகும். அதற்கேற்ப உண்ணா நோன்பிலும் இருந்து விட்டார்.

கட்டாடியார் கனவில் தோன்றிய அம்மை **"புலவன் கைகளைக் குவித்து போற்றிப் பாடுவான் அவன் பாடும் பாடலை ஒவ்வொரு வரியாக ஊர்மக்கள் எல்லோரும் சேர்ந்து எழுதிக்கொள்ளுங்கள் அவனை எதுவும் கேட்கக் கூடாது பிழைகள் இருந்தால் நீங்களே பார்த்து திருத்திக்கொள்ள வேண்டும்"** என்று வாக்குக் கொடுத்தனள் அதன் பிரகாரம் அறங்காவலர்கள் மூலம் ஊர்மக்களுக்கு தெரியப்படுத்தி அடுத்த நாள் சடங்கின் போது எல்லோரும் ஆயத்தமாகி காத்திருந்தனர்.

என்ன அதிசயம்! கைகளை வழக்கமாக பின்பக்கம் கட்டிக் கொண்டு திரியும் புலவன் நாவிதன் நாகன் அன்றைய பூசையின் போது இருகரங்களையும் மானசீகமாகக் குவித்து வணங்கி பாடத் தொடங்கினான் வழக்கமாக பூசைகள் திரை திறக்காமலே நடைபெற்று வந்தன. அன்று புலவன் நாகன் பாட ஆரம்பித்ததும் கதவுகள் தாமாகத் திறந்து திரையும் விலகி பூசை முகத்தை எல்லோராலும் பார்க்கக் கூடியதாக அமைந்தது.

> "சீர்கொண்ட பாரத மருப்பொன்றினாலே
> சிகர கிரி தனிலெழுது சித்திர மாமுகிலே....." என்று

தொடங்கும் விநாயகர் காப்போடு பன்னிரெண்டு எட்டுச் சீர்தளைச் செய்யுள்களைப் பாடிமுடித்த புலவன் தன் செருக்ககன்று அம்மைதாள் சரன்புகுந்தான் என்க.

அங்கிருந்த பக்தர்கள் அனைவரும் ஆனந்த பரவசத்தில் அம்மனைப் போற்றித் துதித்தனர். அதன் பின்பு ஒருநாள் நடுநிசிவேளை யாருக்கும் ஓசை எழுப்பப்படாமல் நித்திரையில் இருந்த கட்டாடியாரை பெண் உருவில் சமுத்திரக் கரைக்கு அழைத்துச் சென்ற கண்ணகை அம்மன் அங்கே அவரது நாக்கில் அட்சரம் எழுதி குரு தீட்சை நல்கினாளாம் அதன் பின்பு நைவேத்திய கருமங்கள் முறைப்படி நடைபெற்று வந்தன.

### கண்பார்வையைப் பறித்தெடுத்த கற்பரசி

ஒரு காலத்தில் ஆரையம்பதி கந்தசுவாமி கோயிற் பூசகர்களாக "நம்பிமார்" என்றழைக்கப்பட்ட ஒரு வீரசைவ மரபினர் இருந்து வந்தனர் இவர்கள் உலகநாச்சி இளவரசின் காலத்தில் கேரளா நாட்டில் இருந்து வருவிக்கப்பட்ட பல்தொழில் சிறைக் குடிகளோடு சேர்ந்து பண்டாரங்களாக இங்கு வந்திருக்க வேண்டும் இவர்களின் எச்சசொச்சங்களே இன்றும் கோவில் குளம் பகுதியில் வாழ்ந்து வரும் சமூகத்தினர் என்பதற்கு அவர்களது பழக்க வழக்கங்கள் செயற்பாடுகள் இடம் தருவதாக அமைகிறது.

கோயிற் பூசகராக இருந்த நம்பி பரம்பரையில் வந்த பெரிய நம்பியார் சின்ன நம்பியார் கண்ணி நம்பியார், காத்த நம்பியார் போன்றோர் நினைவு கூரத்தக்கவர்கள் இவர்கள் காலம் 1922ம் ஆண்டுக்கு முற்பட்டதென்று உறுதியாகக் கூற இயலும். 1922ம் ஆண்டு முதல் கெருடாவில்லைச் சேர்ந்த சிவஸ்ரீ சின்னத்துரைக் குருக்கள் ஆரையம்பதி கந்தசாமி கோயில் பூசகராக நியமிக்கபட்டுவிட்டார். 1850 தொடக்கம் சில வருடங்கள் கொக்கட்டிசக்சோலை தான்தோன்றீஸ்வரர் ஆலயக் குருக்களும் அதன் பின் தம்பலாகமம் கோணேஸ்வரக் குருக்களும் இங்கு பூசகராக இருந்தமையை அறிய முடிகின்றது.

சடங்குகள் முடிவுற்றதும் அம்மன் அடங்கிய பேழை கந்தசுவாமி கோயில் சக்தி நைவேத்திய பீடத்தில் இருத்தப்படுவதுவும் பின்னர் உரிய காலத்தில் எடுத்துச் செல்லப்படுவதுவும் வழக்கம் என்பதைத் தெரிந்து கொண்ட கண்ணி நம்பியார் பேழையின் உள்ளே என்ன இருக்கிறது என்பதை தெரிந்து கொள்ளும் ஆசையால் உந்தப்பட்டார். ஒரு நாள் கட்டாடியாரோடு கந்தசாமி கோயிலின் முகப்பில் உரையாடிக்கொண்டிருந்த போது கண்ணி நம்பியார் கேட்டார்

"கட்டாடியார், நீங்கள் எடுத்துச் செல்லும் பேழையுள் என்ன இருக்கிறது? உங்களுக்கு தெரியுமா?

"ஐயோ எனக்கு எதுவுமே தெரியாது அந்தச் சமயத்தில் மட்டும் அதனை அப்படியே எடுத்துச் சென்று நிலைநிறுத்துவதைத் தவிர" இது கட்டாடியாரின் அர்பணிப்புடனான பதில் கண்ணி நம்பியார் விட்டபாடில்லை ஒரு தீர்மானத்துடன் தான் கேட்டார்.

“கட்டாடியார் எனக்கு அதனைப் பார்க்க வேண்டும் என்ற ஆசை வலுக்கிறது”
“ஐயோ நம்பியார் இது வேண்டாம் நெருப்போடு விளையாட விரும்பலாமா?”
“ இல்லை கட்டாடியார் அதனை நான் பார்த்தே ஆக வேண்டும் “
“அப்படியானால் இதில் என் பங்கு என்ன இருக்கிறது? பார்த்து விடுவதுதானே?”
“பார்த்து விடலாம் தான் ஆனால் அதன் உட்பொருளை கண்டமைக்கு ஒரு சாட்சியாவது வேண்டாமா?”
“அதுதான் உங்களை ……”
“ஐயோ சாமி இது அபசாரம். அம்மனை விசுவாசிக்கும் நான் இதற்கு எவ்வகையிலும் உடந்தையாக மாட்டேன் என்னைக் கட்டாயப்படுத்தாதீர்கள். நான் வருகிறேன்”
“சரி சரி நீங்கள் பொறுமையாக இருந்து கொள்ளுங்கள் நான் திறந்து பார்க்கின்றேன்”

என்ற நம்பியார் பேழையை எடுத்து வந்து மூடியை வலக்கரத்தால் திறந்து நேராக கண்களை நுழைக்க முற்பட்ட போது……

ஐயோ! அதனினின்று வெளியேறிய ஒளிப்பிரவாகம் ஆயிரம மின்னல் சக்தியைக் கொண்டதாய் மூடிமுழிப்பதற்குள் நேராக முகத்தில் பாய நம்பியார் தன்னையும் அறியாமல் திறந்த மூடியை அப்படியே மீண்டும் அடைத்துப் பூட்டிவிட்டார். பூமியில் விழுந்து அழுது புரண்டார். அவரால் எதுவும் பேசமுடியவில்லை எதையும் பார்க்க இயலவில்லை எதையும் உணரும் திடம் இருக்கவில்லை. நான் என்ற அகங்காரம் ஒடிந்து தகர்ந்து நம்பியாரை அம்மை மீது இரந்து துதிக்க வைத்துவிட்டது.

அன்று முதல் கண்ணி நம்பியார் “இறதக்கண் நம்பியார்” என்ற நாமத்தோடு வலம் வரத் தொடங்கியதுதான் மிச்சம். அம்மையினால் நிகழ்த்தப்பட்டதாகக் கூறப்படும் மற்றைய சம்பவத்தையும் இங்கு பார்ப்போம.

### கள்ளியம் பிட்டியை எரித்த கண்ணகை

மஞ்சன்தொடுவாய் கிராமத்தில் அமர்ந்திருக்கும் கண்ணகை தேவிக்கு பிரதி வருடமும் ஆனிமாதம் நிகழும் பௌர்ணமி திதியை குளிர்த்தி நாளாகக் கொண்டு முதல் மூன்று நாட்களும் சடங்குகள் செய்யப்பட்டு வந்தன அங்கே ஒரு முகக்களை மட்டுமே இருந்த காரணத்தினால் ஆரையம்பதியில் உள்ள

கண்ணகை அம்மன் பேழையை அங்கு கொண்டு சென்று பூசை, சடங்குகள் செய்து முடிந்த பின்பு மீண்டும் ஆரையம்பதிக்குக் கொண்டு வந்து பழையபடியே அமர்த்துவது வழக்கமாக இருந்து வந்தது.

அன்னையின் பேழை கட்டாடியார் வண்ணக்கர் மற்றும் பிரமுகர்கள் அடங்கலாக பயபக்தியுடன் மட்டக்களப்பு வாவியின் காட்டுமாவடித் துறையில் வைத்து அதற்கென்று பிரத்தியேகமாகத தயாரிக்கப்பட்ட அலங்கரிக்கப்பட்ட தெப்ப ஓடத்தில் வைத்து கோலாகாலமாக எடுத்துச் செல்லப்படுவது வழக்கம். ஆரையம்பதி காட்டுமாடித்துறையில் இருந்து இப்பயணம் ஆரம்பமாகும்.

இந்து மதத்தில் சக்தி வழிபாடு நாக வழிபாட்டுடன் பின்னிப் பிணைந்ததொன்று இதற்கு காரணம் திராவிட இனத்தில் நாகர் என்ற பிரிவினர் நாக வணக்கத்தையும் இயக்கர் இயற்கையின் சிருட்டிகளான மரம், கல், மண், அக்கினி, விலங்குகள் என்பவற்றையும் தத்தமது வழிபாட்டுச் சின்னங்களாக கொண்டிருந்த மையுமேயாகும் என்று "நாக வழிபாடு" நூலை எழுதிய கலாநிதி.ப.அறவாணன் அவர்கள் முதற்கொண்டு வேறுபல ஆராய்ச்சி வல்லுனர்கள் கூறுகின்றனர். அதிலும் கண்ணகை வழிபாட்டோடு நாக வழிபாட்டுக்கும் நெருங்கிய தொடர்புகள் உள்ளதென்பதை அனுபவ வாயிலாகவும் எம்மால் அறிய முடிகிறது. முற்பிறப்பில் கண்ணகை அவதாரம் எடுத்த பராசர முனிவரின் மகளின் பெயர் கூட நாகமங்கலை என்பதுடன். அம்பாளின் கால் சிலம்பில் இருந்த மாணிக்கங்கள் நாக மாணிக்கங்கள் என்பதும் கண்ணகை வழிபாட்டிற்கும் நாக வழிபாட்டிற்கும் உள்ள தொடர்பாக கொள்ளலாம்.

ஆரையம்பதி கண்ணகை அம்மன் ஆலயத்தில் இரண்டு நாக பாம்புகள் அம்மையின் பேழையை பாதுகாத்து வந்துள்ளன. அம்மனுக்கு மடைவைக்கும் இடத்தில் இவை இரண்டும் படுத்து இருக்குமாம் கட்டாடியார் போங்கடா நான் மடைவைக்கப்போறேன் என்று கூறினதும் மேடைக்கு சென்று விடுமாம். அம்பாள் கந்தசுவாமி ஆலயத்தில் இருக்கும் பீடத்துக்கு அருகே குறித்த நாகங்கள் படுத்துக்கிடந்து காவல் புரியுமாம் ஏதாவது சத்தம் கேட்டால் எழுந்து பார்த்துவிட்டு எதுவும் இல்லை என்றால் மீண்டும் படுத்துக்கொள்ளுமாம் . பூசைகளுக்கு எந்தவித இடையூறும்

விளைவிக்காமல் தனது கடமை செய்வதற்கு அனுமதிக்குமாம். என கந்தசுவாமி கோயில் பிரதம குருவாக இருந்த சோமசுந்தர குருக்கள் தன்னிடம் கூறினார் என பொன்னையா அவர்கள் தனது 'கண்ணகை வரலாறு' கையெழுத்து பிரதியில் மேற்படி நாகங்களின் பிரசன்னத்தை பதிவு செய்துள்ளார்

மஞ்சந்தொடுவாய்க்கு எடுத்துச் செல்லும் போது இவைகளும் கூடவே காட்டுப் பாதையால் சென்று அவ்விடம் சேருமாம். காட்டுப் பாதையால் செல்லும் வேளை காத்தான்குடி கிராமத்தை ஊடறுத்தே செல்ல வேண்டி ஏற்படும் அவ்வாறே மீண்டு வரும் போதும் அதே வழியைப் பின்பற்றி வந்தன. அவ்வாறு அன்னை கண்ணகையின் புறப்பாடு சம்பந்தமாக துறையடியில் கும்பம் வைத்து மாவிலை தோரணங்கள் கட்டி குரவை ஒலி எழுப்பி தெப்பமொன்றில் கோலாகலமாக மஞ்சந்தொடுவாய்க்கு அனுப்பி வைக்கப்பட்ட பின்னர் காட்டு வழியாக சென்று கொண்டிருந்த நாகங்களில் ஒன்றை பலாவடிக்கடை அல்லது குப்பைத்திடல் அல்லது கள்ளியம் புட்டி என்ற இவ்வனைத்துப் பெயர்களாலும் குறிப்பிடப்பட்டு வந்த அதே இடத்தில் நின்றுகொண்டிருந்த சில முஸ்லீம் விசமிகள் அடித்துக்கொண்டுவிட்டனர். இணையொடிந்த மற்றைய நாகம் சொல்லொணாத் துயருற்று அவர்களைப் பழிவாங்கத் துடித்தும் பயன் கிடைக்கவில்லை. அது பட்ட வேதனையை அறிந்தோ என்னவோ அம்மன் கள்ளியம்பிட்டியில் சிறு பொறி நெருப்பாக மூண்டு பரவி அங்கிருந்த அத்தனை குடிசைகளையும் எரித்துச் சாம்பலாகிவிட்டது. இதனை இங்குள்ள இந்துக்கள் மட்டுமல்ல இஸ்லாமியச் சகோதரர்களும் நன்கு அறிவர்.

இவ்விடயம் தொடர்பாக 1980 களில் தினகரன் பத்திரிகையில் ஒரு கட்டுரை வரையப்பட்ட போது அதற்கு எதிர்ப்பு தெரிவித்து சில முஸ்லீம் கடும் போக்காளர்கள் என்னைச் சந்தித்து உரையாடினர். மறுப்பறிக்கை விடப்போவதாகவும் கூறினர் பின்னர் உண்மையை தங்களது மூத்தோர்கள் மூலமாக அறிந்துகொண்டனர் போலும் எந்த ஒர் மறுப்பறிகைகையும் வரவில்லை. தர்மத்தைச் சூது கௌவும் இறுதியில் தர்மமே வெல்லும் என்ற சிலப்பதிகாரக் கூற்று இதற்கோர் எடுத்துக்காட்டாக அமைந்தது.

கற்புக்கரசியாக நின்று மதுரையை மூன்று முறை வலம் வந்து அப்பதியை எரித்த காரிகை கண்ணகை நல்லாள் கள்ளியம்புட்டியை ஓராண்டு பூர்த்தியின் போது எரியூட்டி அவர்களுக்கு நல்லறிவைப் புகட்டினர் என்க.

ஆரையம்பதி பிரதேசத்தில் வாழ்மக்களிடையே பிணக்குகள் ஏற்பட்டு ஒருவரை ஒருவர் எச்சரிக்கும் சந்தர்பங்களில் **"கள்ளிப்பிட்டிய எரித்தது போல உன்ன அம்மாள் எரிச்சிப்போட்டுவா... "** என கூறி எச்சரிக்கும் சொல்லாடாடல் இன்றும் பயன்படுத்தப்பட்டு வருவது மேற்குறித்த சம்பவங்களின் அடிப்படையிலே தோற்றம் பெற்றதாகும் என்பதும் இங்கு குறிப்பிடத்தக்கது.

இவை தவிர கடந்த 20ம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் அதாவது 1965ம் ஆண்டு ஆடிமாதம் வாக்கில் அம்மையின் அருளாட்சியினால் நடந்தேறிய சம்பவவென்றை இங்கு சேர்த்துக் கொள்ளுதல் பொருத்தமென்றே நினைக்கின்றேன். இச்சம்பவத்தோடு தொடர்பு கொண்ட மொத்தம் ஐவரில் இன்று எஞ்சி நிற்பவன் அடியேன் ஒருவன் மட்டுமே அதுவும் இங்கு இச்சம்பவத்தை உரைக்கும் தரத்தில் என்னை அமைத்ததும் அவளின் திருவுள்ளமென்றே எண்ணத் தோன்றுகிறது. விடயத்திற்கு வருவோம்.

### ஆடிப்பூரத்தன்று ஆரற்றிய உடுக்கை ஒலி

ஏறத்தாள 51 வருடங்களுக்கு முன்பு ஒரு நாள், நடுநிசிவேளை, அப்போது ஆரையம்பதிக் கிராமம் மின் இணைப்பு பெற்றிருக்காத காலக்கட்டம் எங்கும் இருள் சூழ்ந்து மயான அமைதியாகக் காட்சி தந்து கொண்டிருந்தது, சனநடமாட்டமோ கூச்சல் இரச்சலோ எதுவும் இடம்பெறவில்லை அடுத்த வீட்டில் வசித்து வந்த கோபாலன் அவர்கள் எங்களது வீட்டுக் கதவைத் தட்டி நடு நடுங்கும் குரலில் "மாஸ்டர்......மாஸ்டர் என்று அழைக்கும் ஒலியில் கண்விழித்துக்கொண்ட எனது தந்தையார் கதவைத் திறந்து வெளியே வந்தார். நானும் கூடவே அங்கிருந்தேன்.

பரபரப்படைந்த நாங்கள் பார்த்தபோது கோபாலன் உடலெல்லாம் பதைபதைக்க நடுங்கும குரலில் கூறினார் அங்கே கேட்டுப்பாருங்கள் கண்ணகையம்மன் கோயில் பக்கமிருந்து உடுக்கை ஒலி எழுகிறது. எவரது

நடமாட்டத்தையும் காணவும் இல்லை என்றவர் " வாருங்கள் கோயிலடி வரைச் சென்று பார்ப்போம்" என்றார். முன்னால் அவர் நடக்க பின்தொடர்ந்து நாங்களும் சென்றோம். தேற்றா மரம் வரை வந்துவிட்டோம். (அப்போது அது ஒரு பெரு விருட்சமாக நின்றிருந்தது சூறாவளியால் சாய்க்கப்பட்டது.) உடுக்கை ஒலியில் மாற்றம் இல்லை. தெளிவாகவே காதில் வந்து விழுந்துகொண்டிருந்தது. அன்று ஆடி மாதம் எந்த நிகழ்ச்சியும் இடம்பெற வாய்ப்பில்லையே என்று எமக்குள் கூறிக்கொண்டு ஒருவித பயஉணர்வு சிக்கிக்கொள்ள மறுபடி வந்து விட்டோம்.

அடுத்த நாள் காலை இந்த விவகாரம் ஒரு குசு குசுப்பாக பேசப்பட்டு செய்தி கசியத் தொடங்கியது கண்ணகையம்மன் கோயிலுக்கு நேர் எதிராக அமைந்திருக்கும் வீடு காலஞ்சென்ற டாக்டர்.சு.தங்கவடிவேலினுடையது.

டாக்டர்.தங்கவடிவேலும் காலம்சென்ற பாடசாலை அதிபர். திரு.வி.சீனித்தம்பியும் அன்று படுவான்கரையில் உள்ள அவர்களது வயலுக்கு சென்று மண்முனைத் துறையில் பாதையைத் தவறவிட்டு விட்டு தோணி மூலம் வீடு வந்து சேர்ந்தனர். அப்போது அவர்களும் பிரமிப்படைந்து கோயிலில் இருந்து வெளி வந்த உடுக்கை ஒலியைக் கேட்டிருக்கிறார்கள். அதனையே அடுத்த நாட்காலை அவர்களால் ஒரு அற்புதச் செய்தியாகப் பரப்பப்பட்டிருந்தது.

இதனை அறிந்து நாங்களும் அன்றிரவு நடந்த உடுக்கை ஒலி ஆலயத்தில் இருந்து வந்ததென்பதை உறுதிப்படுத்திக்கொண்டோம். அதன் பின்பு தான் தெரிந்தது அன்றைய தினம் ஆடிப்பூரத் திதி என்று, பத்திநாச்சி குடிமக்கள் இப்போது இவ்வாடிப் பூரத் திதியில் கந்தசுவாமி ஆலயத்தில் ஆடிப்பூரத் திருவிழா செய்து வருகின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது.

இச்சம்பவம் பற்றி அதிகம் தூற்றிக் கொள்ளாததால் பலருக்கு அம்மையின் இந்த அற்புத லீலை பற்றித் தெரியாது. இவ்விவகாரத்தில் சம்பந்தப்பட்ட நான் ஒருவன் மட்டுமே இன்று உயிர் வாழ்ந்து கொண்டிருக்கின்றேன்.

## கொடுங்கோலனை தன்வினை உணரச்செய்த தாய்

1986, 1987 களில் பியசேன என்பவர் மட்டக்களப்பு பொலிசில் கடமையாற்றிய அதிகாரி, புலி வேட்டை என்ற பெயரில் பல்வேறு தமிழ் இளைஞர்களை வேட்டையாடியவர். அவர் ஆரையம்பதியினுள் நுழைந்தால் பொது மக்களும் தங்களது உயிரை பாதுகாத்துக்கொள்ள தப்பி ஓடுவார்கள் அந்த அளவு கொடுங்கோல் பொதுமக்கள் மீது புரிந்தவர்.

சில சமயங்களில் காத்தான்குடி பிரதேசத்திற்கும் ஆரையம்பதி பிரதேசத்திற்கும் முறுகல் நிலை ஏற்படுவது உண்டு. அன்றும் அப்படியொரு நிலமை ஏற்பட்டது. இந் நிலமைகளை புதினம் பார்ப்பதும் கூடிக்கதைப்பதும் ஊரில் வழமையான விடயமாகும். குறித்த தினத்திலும் பியசேன தனது ஜீப்பில் தனது சாகாக்களுடன் ஊரை நோக்கி வந்தார் கூட்டமாக இளைஞர்களை கண்டதும் துரத்தினார் இளைஞர்கள் பயத்தில் ஒட, அவர்களைதுரத்திய பியசேனாவும் அவரது சகாக்களும் கண்ணகை அம்பாளின் அரசமரம் கடந்து அலங்கார மண்டபத்தினுள் சப்பாத்து அணிந்த கால்களுடன் ஆயுதங்கள் சகிதம் நுழைந்து விடார்கள். மறுகணமே எங்கு இருந்ததோ தெரியாது ஓர் கரும் குழவிக்கூட்டம் திடீர் என்று பியசேனாவையும் அவரது சகாக்களையும் துரத்தி துரத்தி குத்த தொடங்கியது பியசேனாவும் சகாக்களும் அம்பாளின் ஆலய வளாகத்ததை விட்டு வெளியேறும் வரை துரத்திக் கொட்டியது, பியசேனா ஆலய வளாகத்ததை விட்டு ஓடி வெளியேறிய மறு கனமே காணாமல் போனது அந்த கருங்குழவிக்கூட்டம். பியசேனாவும் அவரது சகாக்களும் திகைத்து நின்றனர். அம்பாளின கோபத்தையும், தங்களது தவறுக்கான தண்டனையையும் உணரந்து. குனிந்த தலையுடன் ஊரைவிட்டு வெளியேறிச் சென்றனர்.

மறுநாள் வெள்ளிக்கிழமை மீணடும் ஊருக்குள் நுளைந்த பியசேனவும் சகாக்களும் முற்றிலும் வேறுபட்ட மன நிலமையில் அம்மன் சந்தியில் பூசையில் கலந்து கொண்டிருந்ததை மக்கள் ஆச்சரியத்துடன் கண்டிருந்தனர். கடும் போக்காளனாக காணப்பட்ட பியசேனாவை அடக்கி ஆட்கொண்டு ஊரைக்காத்தருளிய அம்மானின் அருட்கடாட்சத்தை என்னவென்று சொல்வது.

இவை மட்டுமல்லாது, சடங்கு காலங்களில் அம்பாளின் மணல்வீதிகளில் பிள்ளைகள் ஓடி விளையாடி சுட்டித்தனம் பண்ணுவதை கண்ட சின்னத்துரை கட்டாடியார் அப் பிள்ளைகளை அமைதிகாக்கும் படி கூறியியதும், அன்று அம்பாள் கட்டாடியாருக்கு "என் சந்திநியில் என் பிள்ளைகளை என்ன செய்தாலும் கேக்கவும் போடாது தடுக்கவும் போடாது என" கனவில் உரைத்தது என ஏராளமான அற்புதங்கள் உலக நாயகியான கண்ணகை தேவியினால் நிகழ்தப்பட்டுகொண்டுதான் இருக்கின்றன. அகிலாண்டேஸ்வரியான அம்மை தனது பக்தர்கள் ஒவ்வொருவர் வாழவிலும் அவரவர் வேண்டுகோள்படியும் இரக்கப்பட்டும் வேறும் பல விநோதச் செயல்களை செய்து மகிழ்வித்திருப்பார். இவை ஒவ்வொன்றும் வரலாறாக வெளிவருவதற்கு அவர்களுக்குச் சந்தர்ப்பம் இல்லாததால் அவ்வாறு அமையவில்லை வெளிப்படுத்தப்படும் இவ்வற்புத நிகழ்ச்சிகளை வைத்தே அம்மையின் கருணையைக் கூறி மகிழ்ந்து வணங்குவோமாக.

முடிவுரை

ஒவ்வொரு சமூக அமைப்பிலும் அவ்வமைப்பு சேர்ந்த அங்கத்தினர் எல்லோருக்கும் பொறுப்புக்கள் உண்டு என்பதை மறுப்பதற்கில்லை. அதிலும் சிறப்பாக இளைஞர்களுக்கு பொறுப்பின் வீச்செல்லை அதிகம் இருக்கிறது. காலத்திற்கேற்ற முன்மாதிரிகளைக் கடைப்பிடித்து பண்டைய பாரம்பரிய மரபினை வழிநடத்திச் செல்வதில் அவர்களுக்குள்ள கடமைகள் அளப்பரியன. அவ்விதம் அவர்கள் அக்கறை செலுத்தாமல் வேறு பாதையில் செல்ல முற்படும் போதுதான் சமூகம் பின்னடைவை எதிர்நோக்குகிறது.

இன்றைய காலகட்டத்தில் இளைஞர்கள் சிலர் சேர்ந்து ஆலயத் தொண்டுகளிலும் பராமரிப்பு பணிகளிலும் தம்மை ஈடுபடுத்தி வருவது வரவேற்கத்தக்கதொன்றாகும். கண்ணகை அம்மன் ஆராதனைக் காலத்திலும் வீரமா காளி ஆலயப் பரிபாலன விடயங்களிலும் இவர்களது பங்கு பாராட்டும் படியாக அமைந்துள்ளன.

இதுபோன்று ஏனைய சமூகசீர்திருத்தப் பணிகளிலும் நன்கு திட்டமிட்டு செயற்பட முன்வரின் சமூகம் முன்னேற்றம் அடைவதுடன் சௌஜன்னிய வாழ்விற்கும் அடிகோலும் என்பது திண்ணம்.

## கொடுங்கோலனை தன்வினை உணரச்செய்த தாய்

1986, 1987 களில் பியசேன என்பவர் மட்டக்களப்பு பொலிசில் கடமையாற்றிய அதிகாரி, புலி வேட்டை என்ற பெயரில் பல்வேறு தமிழ் இளைஞர்களை வேட்டையாடியவர். அவர் ஆரையம்பதியினுள் நுழைந்தால் பொது மக்களும் தங்களது உயிரை பாதுகாத்துக்கொள்ள தப்பி ஒடுவார்கள் அந்த அளவு கொடுங்கோல் பொதுமக்கள் மீது புரிந்தவர்.

சில சமயங்களில் காத்தான்குடி பிரதேசத்திற்கும் ஆரையம்பதி பிரதேசத்திற்கும் முறுகல் நிலை ஏற்படுவது உண்டு. அன்றும் அப்படியொரு நிலமை ஏற்பட்டது. இந் நிலமைகளை புதினம் பார்ப்பதும் கூடிக்கதைப்பதும் ஊரில் வழமையான விடயமாகும். குறித்த தினத்திலும் பியசேன தனது ஜீப்பில் தனது சாகாக்களுடன் ஊரை நோக்கி வந்தார் கூட்டமாக இளைஞர்களை கண்டதும் துரத்தினார் இளைஞர்கள் பயத்தில் ஓட, அவர்களைதுரத்திய பியசேனாவும் அவரது சகாக்களும் கண்ணகை அம்பாளின் அரசமரம் கடந்து அலங்கார மண்டபத்தினுள் சப்பாத்து அணிந்த கால்களுடன் ஆயுதங்கள் சகிதம் நுழைந்து விடார்கள். மறுகணமே எங்கு இருந்ததோ தெரியாது ஓர் கரும் குழவிக்கூட்டம் திடீர் என்று பியசேனாவையும் அவரது சகாக்களையும் துரத்தி துரத்தி குத்த தொடங்கியது பியசேனாவும் சகாக்களும் அம்பாளின் ஆலய வளாகத்ததை விட்டு வெளியேறும் வரை துரத்திக் கொட்டியது, பியசேனா ஆலய வளாகத்ததை விட்டு ஒடி வெளியேறிய மறு கனமே காணாமல் போனது அந்த கருங்குழவிக்கூட்டம். பியசேனாவும் அவரது சகாக்களும் திகைத்து நின்றனர். அம்பாளின கோபத்தையும், தங்களது தவறுக்கான தண்டனையையும் உணரந்து. குனிந்த தலையுடன் ஊரைவிட்டு வெளியேறிச் சென்றனர்.

மறுநாள் வெள்ளிக்கிழமை மீணடும் ஊருக்குள் நுளைந்த பியசேனவும் சகாக்களும் முற்றிலும் வேறுபட்ட மன நிலமையில் அம்மன் சந்தியில் பூசையில் கலந்து கொண்டிருந்ததை மக்கள் ஆச்சரியத்துடன் கண்டிருந்தனர். கடும் போக்காளனாக காணப்பட்ட பியசேனாவை அடக்கி ஆட்கொண்டு ஊரைக்காத்தருளிய அம்மானின் அருட்கடாட்சத்தை என்னவென்று சொல்வது.

இவை மட்டுமல்லாது, சடங்கு காலங்களில் அம்பாளின் மணல்வீதிகளில் பிள்ளைகள் ஓடி விளையாடி சுட்டித்தனம் பண்ணுவதை கண்ட சின்னத்துரை கட்டாடியார் அப் பிள்ளைகளை அமைதிகாக்கும் படி கூறியியதும், அன்று அம்பாள் கட்டாடியாருக்கு "என் சந்திநியில் என் பிள்ளைகளை என்ன செய்தாலும் கேக்கவும் போடாது தடுக்கவும் போடாது என" கனவில் உரைத்தது என ஏராளமான அற்புதங்கள் உலக நாயகியான கண்ணகை தேவியினால் நிகழ்தப்பட்டுகொண்டுதான் இருக்கின்றன. அகிலாண்டேஸ்வரியான அம்மை தனது பக்தர்கள் ஒவ்வொருவர் வாழவிலும் அவரவர் வேண்டுகோள்படியும் இரக்கப்பட்டும் வேறும் பல விநோதச் செயல்களை செய்து மகிழ்வித்திருப்பார். இவை ஒவ்வொன்றும் வரலாறாக வெளிவருவதற்கு அவர்களுக்குச் சந்தர்ப்பம் இல்லாததால் அவ்வாறு அமையவில்லை வெளிப்படுத்தப்படும் இவ்வற்புத நிகழ்ச்சிகளை வைத்தே அம்மையின் கருணையைக் கூறி மகிழ்ந்து வணங்குவோமாக.

முடிவுரை

ஒவ்வொரு சமூக அமைப்பிலும் அவ்வமைப்பு சேர்ந்த அங்கத்தினர் எல்லோருக்கும் பொறுப்புக்கள் உண்டு என்பதை மறுப்பதற்கில்லை. அதிலும் சிறப்பாக இளைஞர்களுக்கு பொறுப்பின் வீச்செல்லை அதிகம் இருக்கிறது. காலத்திற்கேற்ற முன்மாதிரிகளைக் கடைப்பிடித்து பண்டைய பாரம்பரிய மரபினை வழிநடத்திச் செல்வதில் அவர்களுக்குள்ள கடமைகள் அளப்பரியன. அவ்விதம் அவர்கள் அக்கறை செலுத்தாமல் வேறு பாதையில் செல்ல முற்படும் போதுதான் சமூகம் பின்னடைவை எதிர்நோக்குகிறது.

இன்றைய காலகட்டத்தில் இளைஞர்கள் சிலர் சேர்ந்து ஆலயத் தொண்டுகளிலும் பராமரிப்பு பணிகளிலும் தம்மை ஈடுபடுத்தி வருவது வரவேற்கத்தக்கதொன்றாகும். கண்ணகை அம்மன் ஆராதனைக் காலத்திலும் வீரமா காளி ஆலயப் பரிபாலன விடயங்களிலும் இவர்களது பங்கு பாராட்டும் படியாக அமைந்துள்ளன.

இதுபோன்று ஏனைய சமூகசீர்திருத்தப் பணிகளிலும் நன்கு திட்டமிட்டு செயற்பட முன்வரின் சமூகம் முன்னேற்றம் அடைவதுடன் சௌஜன்னிய வாழ்விற்கும் அடிகோலும் என்பது திண்ணம்.

சீர் பொருந்தும் ஐங்கரனே திருமால்தன் மருகோனே
கார்பொருந்தும் ஆனைமுகக் கணபதியே கற்பகமே
பார் பொருந்தும் கண்ணகையார் பழிவாங்கிக் குளிர்ந்த கதை
ஊர் செழிக்கப் பாடுகின்றேன் ஒரு பிழையும் வாராமல்
ஒரு பிழையும் செய்யாத உலகு புகழ் கோவலரைப்
பெருமளுவாள் கொல்லுவித்த பிழை மாறன் தன்னை எரித்துக்
கருத்தரிய ஆயர் மனை கனல் மூளச் சாபமிட்டு
இரு முலையுங் குளிர்ந்த கதை யானுரைக்க காரணமே

கதை

காரணியுங் கொடை வாழ் வணிகர் காதல் மிகுந்தோர் கோவனார்
சீரணியுந் திருமாமணி நங்கை செல்வி குலக்கொடி தோன்றினாளே

மண்ணுயிர் மானாகர் தன் மகளார் மாசாற்றுவார்க்கு மருமகளார்
பொன்னுள்ளது மாதவிக்குத்தோற்றுப் போகைக் கிசைந்தாள் கணவனுடன்

கொஞ்சிய செஞ்சொற் கிளிப்பிள்ளை தன்னைக் கொண்டு சென்றுற்றவர் கையில் கொடுத்து
வஞ்சகமின்றி வளருமென்று வந்தாரே கோவலனார் பின்பு செல்ல

தீதாறு காதம்பல கடந்து சிறந்த கவுந்தியோடங்கிருந்து
மாசறு வல்வினை தீரவென்று மனையறி வோமெனப் போயினாரே

வைகைக் கரையதின் மீதிருந்து மாது வணிகர் நடந்த வாறே
தையல் வருந்தக் கவுந்தியனாரும் தார் வணிகர்கொரு தீங்கில்லை யென்றார்

அன்னம் குருகு புறாவினங்கள் அவை துணையாக இருந்த வாறே
பொன்னின் மணிச் சிவிகை தன்னிலேறிப் போந்த இடையர் தெருப் புகுந்தாரே

முதிரும் பழவினை மூளலுமே மொய் குழலாள் தம்மை யங்கிருத்தி
மதுரை புகுந்து சிறிது நாளில் வாணிபஞ் செய்வோம் எனக்கருதி

கண்ணகை காற்பொற் சிலம்பது கொண்டு கருத்துடன் நல்லோர் கடை புகுந்தாரே
எண்ணமொன்றறியாத கோவலனாரும் ஏறாவிலை யேற்றம் சொன்னவாறே

விற்கும் சிலம்பு விலை பெரிது என்று வேளாளர் கொள்ளாமல் மீண்ட போது
தர்க்கம் பெரியதோர் தட்டானார்க்கு தன்கைச் சிலம்பொன்றைக் காட்டினாரே

நிற்கவன் வாசலில் நிற்கவென்று நீணில வேந்தர்க் கெடுத்துரைத்தாரே
கொற்றச் சிலம்பொடு கள்வரைக் கொடுவாருமென்று அவர் கூறினாரே

மற்றொன்றறியாத மன்னன் சினந்து வணிகனைக்கொல்வோமென நினைந்து
குற்றமொன்றறியாத கோவலன் தன்னைக் கொடு மளுவாலே பிளந்தவாறே

காதலன் பட்ட கடுந் துயரங் கனவிலே கண்டாள் கனங்குழலாள்
மாதவமில்லாத் தவம் புரிந்தோர் மதுரை யழிப்போமென நினைந்து

வேயான தோழியும் மாதரியும் மெல்லி நல்லாள் தமை யங்கிருத்தி
தூய மொழியாரே நீர் சொன்ன மாற்றம் தொல்லுலகோர்க்கிது வேதனை யென்றார்.

மாதுரை கேட்டு மனங் கலங்கி வணிகனைக் கொன்ற களந்தன்னில் வந்து
கூறு வேறான உடலைப் பொருத்திக் கொம்பனையாளுயிர் மீட்டுக்கொண்டாள்

பாண்டியன் செய்த பழிபாவத்தால் பார்மேலெழுந்த பழி மதுரை
மூண்ட வடகனல் தன்னை மூட்டி முழக்காயெரித்தாளே மொய் குழலாள்

ஆயர் குலக்கொடிப் பாவையர் வந்து ஆயிளை தன்னை அடிபணிந்து
தூய நறுநெய் தன்னை வாங்கிச் சுடர்முலை கொங்கையி லப்பினாரே

ஆறிய சிந்தை யரிவையார் வந்து ஆனதோர் சீந்தலைச் சாத்தரும் வந்து
நாறிய பூங்குழல் கோதை மாதே நங்காய் நீ வரு திங்கள் நுதலே

ஐயையே யுந்தன் அடிபணிந்தே ஆதுலர் சேரி குளிரவென்றே
வைகாசி திங்கள் வருவோமென்று வரிசைக் கிசைந்து விடைகொடுத்தாள்

தானுமத் தோழியும் மாதரியும் தன்னிலொன்றாகிய தார்கோதையாரும்
வானேரெதி கொள்ள வையகமுய்ய மங்கை மகிழ்ந்துல கேறினாளே

ஆறி நடந்தாள் ஆயிளையாள் ஆன திருப்தி வாசலூடே
தேறி நடந்தாள் திரு மாமணி நங்கை செல்வி திருப்தி வாசலூடே

கந்தஞ் செறிந்த கனங்குழலாள் கணவனுடன் பிரியாதவாறே
இந்த வாழ்மனை யிடர் தீரவென்று ஏந்திழை யும்மானை ஆடினாளே

பூந்தடங் கன்னியர் தாம்'புடைசூழப் பொன்னையார் தம்மை யங்கிருத்தி
கூந்தல் மடமயில் சாயல் நல்லாள் கோதை நின்றம்மானை ஆடினாளே

பேரான வேல்விழிப் பொன்னனையாள் புவனம் முழுதும் புரிகுழலாள்
ஆரணமேற்ற அருமறை போற்ற ஆயிளை யம்மானை யாடினாளே

சித்தம் கலங்கிய தென்னவன் கூடலைத் தீக் கொண்டு சுட்டு சிறப்பை யழித்து
பத்தினியென்று பலரும் போற்றப் பாவை நின்றம்மானை யாடினாளே

விற்புருவ வேல்விழி சாயல் நல்லாள் மேதினியெங்கும் குளிர்ந்து வாழ
கற்புடையாளென்று சொற்படைத்த காரிகை யம்மானை யாடினாளே

கொந்து செறிந்த குழலசைய குவலய மெங்கும் குளிர்ந்து வாழ்க
அந்தர வானத்தரம்பையர் போற்ற ஆயிழை யம்மானை யாடினாளே

நாமாறன் கூடலில் நல்லோர் வாழ்த்த நற்றமிழன் துறை கண்ட வேந்தன்
கோமாறன் தன்னைக் கொலை விளைவித்த கோதையம்மானை யாடினாளே

ஆலிலை போலு மணி வயிற்றாள் அங்கையர் கண்ணுடை யாயிளையாள்
சாலிவிழைய மழை பொழியத் தார்கோதை யம்மானை யாடினாளே

பாங்கு புகழ் செறி தார் கோதையாரும் பத்தினியார் தெய்வக் கன்னியர் தாமும்
பூங்க மலத் திரு மாமணி நங்கை பொன்னின் மனை புகுந்தாடினாளே

கன்னியர் கற்பு மிக விளங்க கற்றவர் தன் கிளை வாழ்கவென்று
சென்னி வளவன்தன் மாநகரில் சேயிழை யம்மானை யாடினாளே

கைமானை யேந்திய காரிகையார் கண்டு மகிழ்ந்து கனங்குழலால்
அம்மாளை யேந்திய அங்கயற்கன்னி அம்பொற் சிலம்பொலியென் தலைமேலே

## வேறு

ஒருமா பத்தினி வந்தாள் உலகேழுந் தளைத்திட வந்தாள் வந்தாள்
திருமாமணி நங்கை வந்தாளெம் தேசம் தளைத்திட வந்தாள் வந்தாள்

இப்பாரிடந் தன்னில் வந்தாளி டைச்சேரி வாழ்விக்க வந்தாள் வந்தள்
ஒப்பான பாலகற்கான வன்பாய் ஒருமா பத்தினி வந்தாள் வந்தாள்

சிந்தா குலந்தனைத் தீர்த்த சிவகாமி அபிராமி தன்னருளால்
வந்தாள் கண்ணகை வந்தாள் - மழைமாரி பொழிந்திட வந்நாள் வந்தாள்

வீறான பத்தினி வந்தாள் - விளையாடும் வீதியில் வந்தாள் வந்தாள்
பாலாரும் மென்மொழி வந்தாள் பரிவான கண்ணகை வந்தாள் வந்தாள்

மாறான பாண்டியன் மாழ...வென்று வளமான கொங்கை அரிந்தாள் வந்தாள்
மேலான வேல்விழி வந்தாள் விளையாடும் வீதியில் வந்தாள் வந்தாள்

கொற்றவன் முன்னால் பிளந்து போட்ட கோவலர் அங்கத்தை கூடக்கூட்டி
மற்றவன் றன்னாபல் வசனம் கேட்ட மாதுநல்ளாள் வந்தாள் வந்தாள்

ஆனிப் பொன்னாலே சமைத்த சிலம்பை அங்கே வருந்த அடித்தே உடைந்து
மாணிக்கம் காட்டி வழக்கு வென்ற மங்கை நல்லாள்ளிவள் வந்தாள் வந்தாள்

மாது பராபரி ஆண்டகை வல்லி மங்கை திரிபுர பங்கையர் மாது
ஆதுலர் சேரி குளிரவென்று ஆதிரை வந்துதித்தாள் வந்தாள்

காவலன் செய்த கடும் பழிக்குக் கனலைக் கொழுத்தி மதுரையெரித்து
கோவலரோடு விமானமேறிய கொம்பனையாளிவள் வந்தாள் வந்தாள்

ஏற்றம் மிகுந்தோர் கோவலன் தன்னை இரு பிளவாக மழுவாற் பிளந்து
மாற்றம் மிகுந்தோர் பாண்டியன் தன்னை வழக்காடி வென்றவள் வந்தாள் வந்தாள்

கானாறு மாலைக் குழலசைய காடு கரம்பு கடந்து போந்து
மீனவன் செல்வ மழித்த கோபம் வெஞ்சமா வேல்விழி மாதேயாராய்

கற்றவர் தன்கிளை வாழவென்றும் காசினியெங்கும் தளைக்கவென்றும்
கொற்றவன் செல்வ மழித்த கோபம் கோலமழகிய மாதேயாறாய்

கொஞ்சுபுரத் தாளினை நோகக் கோவலரோடே மதுரையில் வந்து
பஞ்சவன் செல்வ மழித்த கோபம் பாலாரும் என்மொழி மாதே யாராய்

வாடுந் துடியிடை நோக நடந்து வஞ்சியர் பின்னே மதுரையில் வந்து
கூடலன் செல்வ மழித்த கோபம் கோல மழகிய மாதே யாராய்

விழியிரண்டு அனலாய்ச் சொரிய வேகமுடனே மதுரையில் வந்து
வழுதி மதுராபுரி எரித்த கோபம் வஞ்சமர் வேல்விழி மாதே யாறாய்

ஆமல்ல வென்று ஆராய்ந்து பாராமல் அப்போது செட்டியை வெட்டுவித்து
சோமகுல மன்னன் தன்னைக் கொன்ற கோபம் தோகை மயிலினை மாதேயாறாய்

சிந்தை தளர்ந்து வணிகேசன்பட்ட களங்கண்டு உளச் சினத்தை யடக்கி
சந்திரகுல மன்னன் தன்னைக் கொன்ற கோபம் சாய மயிலினை மாதேயாறாய்

## வேறு

காளிபுடை சூழக் காவிரிப்பூம் பட்டணத்தில்
வாழ் வணிகர் தம்குலத்து மாதே குளிர்ந்தருள்வாய்
இளவேம்பின் கீழே இருந்து வருந்தாமல்
வழமை பெரிதுடைய மாதேகுளிர்ந்தருள்வாய்

மீகாமனுக்கு மிகுந்த வரங்கொடுத்து
நாகமணி வாங்க நயந்தாய் குளிர்ந்தருள்வாய்

சொற்பெரிய மானாகர் துய்ய குலத்தேயுதித்த
சற்பமணி தாளணிந்த தாயே குளிர்ந்தருள்வாய்

எண்ணிலமுமென்று இகல்வனிகர் கோவலர்க்கு
பின்னே வழி நடந்த பேதாய் குளிர்ந்தருள்வாய்

மாதவிக்கு பொன்தோற்று வாழ்வனிகர் தன்னுடனே
காதலித்துப் பின் போன கன்னி குளிர்ந்தருள்வாய்

காவிரிப்பூம் பட்டணத்தே கைவிட்டு அகன்றதன்பின்
பூவிரியும் சோலை புகுந்தாய் குளிர்ந்தருள்வாய்

சாற்றரிய தக்க கவுந்தியனார் தன்னுடனே
பூத்தமலர்ச் சோலை புகுந்தாய் குளிர்ந்தருள்வாய்

ஓடத்தில் ஏறி உயர் காவிரி கடந்து
தேடரிய தென்மதுரை சென்றாய் குளிர்ந்தருள்வாய்

கொக்கினமும் புள்ளும் குரலோசையும் கேட்டு
தக்க வழிநடந்த தாயே குளிர்ந்தருள்வாய்

தென்னம்பழம் சொரிய தேமாங்கனி உதிர
வன்னி வழி நடந்த தாயே குளிர்ந்தருள்வாய்

கொற்றைப் பதிதனக்கு கோவலனார் பின் போந்து
துர்க்கைப் பதிகடந்த தோகாய் குளிர்ந்தருள்வாய்

மடை மீதிற் கயல் பாயும் வாழ்மதுரை மாநகரில்
இடையரகம் புகுந்த ஏந்திளையே குளிர்ந்தருள்வாய்

கட்டிக் கிடந்ததொரு காற்சிலம்பைக் கண்டெடுத்து
செட்டிக்குக் கோவலர் பின் சென்றாய் குளிர்ந்தருள்வாய்

மற்பொலியும் தோழான் வனிகர் தமைக் கொன்ற செய்தி
சொற்பனத்தில் கண்டெழுந்த தோகாய் குளிர்ந்தருள்வாய்

தேறிக் கனாவை திருந்த இடைச்சிக் குரைத்து
சீறிமதுரையிலே சென்றாய் குளிர்ந்தருள்வாய்

தன் கணவன் பட்ட – சதிக்களத்தை தான் தேடி
அன்புடன் வந்துயிரை மீட்ட அம்மே குளிர்ந்தருள்வாய்

தட்டானாற் கொன்ற – தார் வனிகர் மேல் விழுந்து
பட்டிரோ என்றழுத பாவாய் குளிர்ந்தருள்வாய்

கூறும்மொழிகளெல்லாம் - கோவலரைத் தான் கேட்டு
ஏறும் விமானத்தில் என்றாய் குளிர்ந்தருள்வாய்

வன்னியெழாமல் மனத்துள்ளே தானடக்கி
தென்னவனைப் பூசலிடச் சென்றாய் குளிர்ந்தருள்வாய்

வாசலது கடந்து மாளிகையினுட் புகுந்து
பூசலிடப் பாண்டியனைப் போனாய் குளிர்ந்தருள்வாய்

தீதறியாக் கோவலரை தென்னவனே வெட்டுவித்த
ஏது குறையாக என்றாய் குளிர்ந்தருள்வாய்

நல்லோகர் தங்கள் முன்னே நாகமணி காட்டி
கொல்லாமற் பாண்டியனைக் கொன்றாய் குளிர்ந்தருள்வாய்

வாளையெடுத்து வலமுலையைத் தானரிந்து
தோலாடையாக துணிந்தாய் குளிர்ந்தருள்வாய்

ஓடியோரேழு கதவுடைத்து உட்புகுந்து
வாடியே ஏங்கி மனம் சலித்து நிற்பளவில்

பூலியன் மார்பில் பொருந்து முலையால் எறிய
ஏழு கதவுடைத்து மார்புருகப்பட்டதுவே

பட்டேன் பழியெனவே பாரில் விழுந்ததாருயிரை
விட்டே அப்பாண்டியனும் மேலுலகம் சேர்ந்தனனே

வென்றாளே வாழ்மதுரை – மீனவனைத் தான் வதைத்து
கொன்றாளே கண்ணகையார் கோவலரைக் கொன்றதற்கு

தட்டான் பொடியாக – தார் வேந்தன் நீறா
சுட்டெரித்துப் போட்டதொரு தோகாய் குளிர்ந்தருள்வாய்

எல்லைப்படும் பழிக்கு – எண்ணவொண்ணாப் பழிவாங்கி
சொல்லரிய மாமதுரை – சுட்டாய் குளிர்ந்தருள்வாய்

மதுராபுரித் தெய்வம் - வாய் மாற்றம் தான் கேட்டு
சதுராக வேகம் - தனிந்தாய் குளிர்தருள்வாய்

மதிகேடு செய்த விகல் - மாறன் பதியழித்து
பொதுவாரிடந் தனிலே போந்தாய் குளுந்தருள்வாய்

அரிந்த முலையோடு அம்மதுரை நாடுவிட்டு
வருந்தி வழிநடந்து மங்கை வரக் கண்டிடையர்

விரைந்து மனை புகுந்து வெண்ணைதனை அள்ளி வந்து
அரிந்த முலைதனிலே அங்கவரும் அப்பினரே

அப்பி அடிபணிந்து ஆச்சியரைத் தான் நோக்கி
செப்பரிய கண்ணகைத் தெரிவையர் ஏதுரைப்பார்

ஆயர் குலப் பாவாய் - அன்னமே தார்கோதாய்
தூய உங்கள் சேரி சுடதே குளிர்ந்தருள்வாய்

எச்சேரி வேகினும் - இடைச்சேரி வேகாமல்
படைச் சேரி வேகினும் - பறைசேரி வேகாமல்

நன்மையுடன் வாழ்ந்து — நானிலமும் தான் மதிக்க
என்முலை குளிர்ந்தால் போல் - என்றும் குளிர்ந்தருள்வாய்

என்றுதான் சொல்லி இடைச்சியருக்கு கீதுரைத்து
நின்றுதான் அம்மை நேசமுடன் மகிழ்ந்து

அக்கினியை நோக்கி — அனல் மீழச் சாபமிட்டு
மிக்க இடையருக்கு வேண்டும் வரங்கொடுத்து

அடைவாய் மனமகிழ்ந்த அம்மே குளிர்ந்தருள்வாய்
வடல்வாய் அனல் தணிந்த மாதே குளிர்ந்தருள்வாய்

நற்பான மாணாகர் நல்ல குலத்தே உதித்த
கற்பாய் புகழ் படைத்த கன்னி குளிர்ந்தருள்வாய்

எண்ணாது செய்த இதல் மாறன் பதியழித்த
நண்ணாய் விமானம் - நயந்தய் குளிர்ந்தருள்வாய்

கூடலது கடந்து — கோவலரைத் தான் கூட்டி
ஏடவிழ் விமானத் தெழுந்தாய் குளிர்ந்தருள்வாய்

தென்னவனைக் கொன்று திசை நோக்கித்தான் கடந்து
பொன்னுலகம் வீற்றிருக்கப் போந்தாய் குளிர்ந்தருள்வாய்

தேவர்கலெல்லாம் திருவானத் தேரேற்ற
கோவலரை நீங்காத கொம்பே குளிர்ந்தருள்வாய்

சீராய் உலகம் செழித்தே தளைத்தோங்க
வாராய் புறாவினமே – வளர்மதியைக் கைதொழுவோம்

வேதாவும் மாலும் - விடையோனும் வின்னுமுய்ய
ஓதாய் புறாவினமே ஓம் நமசிவாயவென்று

சாலப்பிணியகல – தாரணியோர் ஈடேற
கோலப் புறாவினமே கொடுவாரா வெற்றிலையே

இன்றைய நோய்பிணிகள் - எல்லாம் அகன்றோட
மிண்டனயோர் ஈடேற – மிக்க நிதி உண்டாக

கற்பதித்த தூண்போல் கலங்காப் பதிமனையாள்
நெற்பதித்த தூண் போல் நெருங்காப் பதிமனையாள்

நாற்பாற் குலத்துதித்தோர் ஞாலமெங்கும் உண்டாகி
ஆல்போல் தழைத்து அறுகு போல் வேரூன்றி

மூங்கில் போல் கூட்டம் முசியாமல் வாழ்ந்திருப்பார்
ஓங்கிய செல்வத் துலகத்தோர் தான் வாழ்க

வேதமும் ஐந்தெழுத்தும் வெண்ணீறும் உண்டாக
மாத மும்மாரி மழைபொழிய எந்நாளும்

செந்நெல் மிக வோங்க தேசத்தோர் ஈடேற
கன்னல் மொழி மடவார் - கற்பு நெறி உண்டாக

மன்று தழைக்க- மனுவெல்லாம் ஈடேற
கன்று தழைத்து கறவையினம் பால்பொழிய

பாமாது வாழ்க பராசக்தியும் தான் வாழ்க
பூ மாது வாழ்க புலிமாதும் தான் வாழ்க
சீர் வாழி தெய்வத்திருவுந்தியோன் வாழி
ஏர்வாழி நல்ல ஏந்திழையாரும் வாழி
அங்கயற் கண்ணம்மை அடிக்கமலம் தான் வாழி
பாங்காய் நடுவுரைத்த பத்தினியாரும் வாழி
எம்மை உகந்துருளும் இலட்சுமியாரும் வாழி
அம்மைக்கடி பணிந்த ஆச்சியாரும் தான் வாழ்க
பாடினோர் வாழி படித்தோர் மிக வாழி
ஏடு பிடித்து எழுதினோரும் வாழி
கேட்டோரும் கேட்டு கிளையும் பிணி நீங்க
மாட்டாங்கு வராமல் மானலத்தோரும் வாழி
தக்க செல்வம் உண்டாகி தான தருமம் தழைக்க
இக்கதையை வாசித்தயானும் பிணி நீங்க
கானாறும் மாலை கனங்குழலாள் கண்ணகை தான்
தேனாறும் செஞ்சொற் சிலப்பதிகாரக் கதையை
தன்னால் அறிந்தளவு தரணியில் தானுரைக்க
எந்நாளும் போற்றி இனிதூளி வாழ்வாரே
இன்றே புகழ் படைத்த இன்பப் பெருங்கதையை
வேண்டியிருப்போர்கள் மென்மேலும் வாழியவே

# கல்யாணக்கால் சுற்றுக்காவியம்

புலவர் நாவிதன் நாகன

1. சீர்கொண்ட பாரதம ருப்பொன்றி னாலே
   சிகரகிரி தனிலெழுது சித்திரமா முகிலே
   பார்கொண்ட மாதுபயில் மாயன்மரு கோனே
   பதினாலு புவனமும் பணியுமைங் கரனே
   ஏர்கொண்ட வணிகேசர் மாசாத்தார் கோவலர்க்
   கியல்பாக மணமுடித் திக்கதை யுரைக்கக்
   கார்கொண்ட வீரமுக் கண்ணனே விகடதட
   கரிமுகவ னேவந்து காத்தருள்செய் வாயே

2. செவ்வாழை தாவுவயல் சூழ்செந்தி லானே
   திருவானை கேள்வனே உருவாறு முகனே
   மையார் தடங்குறவர் வாழ்புனந் தன்னிலே
   வளர்கின்ற வேங்கைமர மாகிநின் றவனே
   மெய்யான வணிகேசர் மாசாத்தார் கோவலன்
   வியன்மண முடித்தகதை விரைவுட னுரைக்க
   ஐயா திருக்கதிரை யம்பதிய மர்ந்துவாழ்
   ஆயன்மரு கோனவந் தடியேன்முன் னுதவாய்

3. முன்னுலக முண்டவர்த மக்கரிய முகிலே
   முத்துக்குள் வித்தான முழுமுதற் பொருளே
   மன்னுகடல் நஞ்சையமு தாகவுண் டவனே
   மாறாடி நீறாடி நின்றமா முதலே
   தன்னிகரில் லாதவணி கேசர்கோ வலனார்
   தமதுகல் யாணமது தானுரைத் திடவே
   தென்னவன் முன்நரிப ரிக்குதவு சிவனே
   சீராயர் செல்வியே ஆராய ரமுதே

4. ஆறாறு சமயங்க ளாயிருந் தாயே
   அரனாரி டப்பாக மேயமர்ந் தாயே
   வீறான மாங்கனிய தாயுதித் தாயே
   வெற்றிபுனை மன்னவன் விழிமறைத் தாயே
   கூறான கோவலன் தனையுவந் தாயே
   கூடல்மது ராபுரியை நீயெரித் தாயே

பேறான மண்முனையில் வாழவந் தாயே
பெட்பினுறு கந்தமல ரணையபெண் ணரசே

5. கந்தமத யானைமுக வீரரரு ளாலுங்
கதிரைநகர் முருகேசர் கருணையத னாலுந்
தந்தமுலை யுமைமாது தன்கருணை யாலுந்
தான்தோன்று மப்பருடைய தன்கிருபை யாலும்
சிந்தமிர்த வெண்டாம ரைத்தவிசில் மேவிவளர்
செல்வியென் னுள்ளத்தி ருந்தபடி யாலும்
வந்தாறு முலையூர்க் கண்ணகைதன் னருளாலும்
மற்றுமொரு தேவதையை மனதிலய ரேனே

6. அயராம லாயிரத் தெண்களஞ்சிப் பொன்னை
அரிவைமா தவிதனக் கென்றரச னோத
மயலான மாசாத்து வான்மகன் கோவலரை
வையகம திக்கவொரு நாள்மறித் ததுகண்டு
இயல்பான இவ்வுலகி லென்னைநகை யாரோ
என்தலைவ னேவிளந் தலைபடுவ தென்போர்
மயலான மாதவிக் கணிபணி யளிக்கின்ற
வண்மைபுகழ் கண்ணகையை மனதில்மற வேனே

7. மறவாத கார்முத்து விளைவிக்க மழைமெத்த
வரவிட்ட கண்ணகை மலர்த்தாட் சிலம்பை
புறவான வழுதிநகர் சென்றுகோ வலனார்
பொற்சிலம் பதுவிற்ற போதுகொலை செய்யத்
திறமாள முலைதிருகி மதுரையை யெரித்தே
சேரியில் வரக்கண்டு நாரியர் பணிந்தே
அறவான கொங்கைதனில் வெண்ணெயப் பிடவந்து
அங்கணா மைக்கடவை தங்குகண் ணகையே

8. தங்கமுறு பெற்பணி சதங்கையொடு தண்டை
தரளமணி மாலையுட னுரகமணி நூபுரம்
இங்கவனி யுள்ளபல பொற்பதக் கங்காறை
யாவையுமெ டுத்தினிமை யாய்மனம கிழ்ந்தே
பொங்குபுகழ் காவரிப் பூம்பட்ட ணத்திலுயர்
பூவாமை தவிதனக் கேபொருள ளித்து
மங்கைகா மாட்சியென வல்லமீ னாட்சியென
வந்துனதி தம்பதம ளித்தகண் ணகையே

9. இதம்பட விரண்டருகும் வேதவிசை யோக
விசைந்தமிர்த குங்குமங்க தமுகுமு வெனலீசர்
சதங்கையொடு தண்டைகள லமபவடி மீதே
சலஞ்சலஞ் சலஞ்சலமே னுங்கொடித தும்ப
பதங்களெடு தொந்ததொம் தோமென விசைப்ப
பதஞ்சலி பராக்கிரம பதத்தின்மிசை கொஞ்சச்
சிதம்பர சிதம்பரவெ னக்கொடிய தீவினைகள்
செங்கதிர்முன் னிருளெனச் சிந்தியோ டிடுமே

10. செங்கைதனில் மழுவேந்து சிவனாரு மிங்கே
திருமாலு டன்முனிவர் தேவர்களு மிங்கே
அங்கைதனில் வெண்கோ டெடித்திசிவ னிங்கே
ஆறுமுகக் கடவுள்கண நாதரகளு மிங்கே
மங்கையுடை பூமாது நாமாது மிங்கே
மற்றுமுள நவகோண சத்திகளு மிங்கே
கங்கைபுடை சூழ்மதுரை யெரிசெய்த பத்தினிக்
கண்ணகையு முறைகின்ற கயிலாய மிதுவே

11. இதமான கயிலைமலை யீசானு மிங்கே
இந்திரனு டன்தேவ ரிருஷிகளு மிங்கே
பதமான பததிபுரி சித்தர்களு மிங்கே
பரிவான கின்னரர்கிம் புருடர்களு மிங்கே
சதமான நால்வேத சரஸ்திரமு மிங்கே
தானவர்கள் வானவர்கள் கானவர்க ளிங்கே
முதலான தில்லையம் பதியில்நட மாடும்
மூவாயிரத் தருறை முத்திநக ரிதுவே

12. முவாயி ரத்தொருவ ரானசிவ னிங்கே
முப்பத்து முக்கோடி தேவர்களு மிங்கே
நாவாணர் நவ்வி தவிர்த்தசிவ னிங்கே
நான்முகனை ரெட்சித்த நாரணனு மிங்கே
பாவாணர் தன்சிறைவி டுத்தசிவ னிங்கே
பஞ்சவர்கள் வந்தடிப ணிந்தசிவ னிங்கே
தேவாதி தேவனார் மாடேறு மீசனார்
செல்வணா ருறைகின்ற சிவலோக மிதுவே
சிவலோக மானசிவ னாரிடத் துறையுநீ

13. செங்கண்மால் தங்கையென வந்ததொரு செல்விநீ
தவலோக மானசிவ சத்தியென வந்தநீ
தாரணியில் மானிடர்கள் சஞ்சலம் கற்றுநீ
புவலேக மானதிரி புவனையென வந்தநீ
போற்றுமடி யார்தமக் கேற்றபுண் ணியமுநீ
பவலோக மானவினை தீர்த்திரட் சிக்குநீ
பரிவுசெறி பட்டிநக ரரியபத் தினியே

14. பட்டிநகர் தம்பிலுவில் வீரமுனை காரைநகர்
பவுசுபெறு கல்முனைகல் லாறுமகி ழூரெருவில்
செட்டிபா ளயம்புதுக் குடியிருப் பூர்தல்ல
செல்வமுறு மகிழடித் தீவுமுத லைக்குடா
அட்டதிக் கும்புகழ் வந்தாறு முலைநகர்
அங்கங்கு நித்யகலி யாணியா யுறையும்
மட்டவிழ் பூங்குழல் மண்முனை கண்ணகையை
மனதனில்நி னைக்கவினை மாறியோ டிடுமே

15. மாறாத வல்வினைகள் தீரமங் களமே
மழைசெந்நெல் விளைபூமி வாழ் மங்களமே
ஆறான செல்வமொடு கல்விமங் களமே
அந்தணரு டனநல்ல அரசாமங் களமே
நூறான கோடிமறை நூலும்மங் களமே
நோக்கரிய கற்புநெறி நுவலமங் களமே
சீரான கண்ணகைச் செல்விமங் களமே
சிவனாரு டன்தேவி தேவர்மங் களமே

16. சீர்வரழி மன்னர்செங் கோல்நிதம் வாழி
செப்பரிய செந்நெல்மழை கற்புநெறி வாழி
பார்வாழி நீடூழி நாயன்மார் வாழி
பாவைகண் ணகைவாழி பாவாணர் வாழி
கார்வாழி வேளாளர் குருமுறை வாழி
கன்னிமார் வாழிகட் டாடிமார் வாழி
ஏர்வாழி மட்டுக்க களப்புநகர் வாழி
இதமான தான்தோன்று மீசர்வா ழியவே

சக்தி ஸ்ரீ . வி . பரிபூரணானந்த முதலியார்

1. ஆரையூர் பதியிலுறை கண்ணகித் தாயார் மேல்
அன்போடு காவியம் செப்புதற்கேதான்
வரைமுறை தவறாமல் தொண்டுசெய் கப்புவர்கள்
வந்தெனக்கு வழிகாட்டி நின்றருள வேண்டும்
கரைகாணா சக்திகளைத் தந்தருளுகின்ற
கணபதியும் கந்தனும் கலைவாணித் தாயும்
நிரையாக எந்நாவில் வந்தருளி நின்று
நித்தமும் உனைப்போற்ற வரமருளுவாயே.

2. வரங்களை ஈந்திடவே வடநாட்டிலிருந்து
வங்கமது செழிக்கவே பேழையதில் வந்து
மரங்கள் பல ஓங்கிவளர் மண்முனைப்பதியதனில்
மங்காமல் கோயில் கொண்டெழுந்தருளி நின்று
சிரந்தாழ்த்தி வணங்குகின்ற பக்தர்களைக் காத்து
சிறந்திடவே வரங்களை மங்காமல் வழங்கி
பரம்பொருளின் பெரும்புகழைத் தந்தருளும் சக்தி
ஆரையம்பதியிலுறை கண்ணகித் தாயே.

3. புகழ் செழிக்க வாழ்ந்த திருச்செம்ம நாச்சி
பூம்புகார் பதிகொண்ட பத்தினி தேவிக்கு
தகவுடைய ஆலயத்தை அன்புடனே அமைத்து
தன்மக்கள் வழிபடவே வழியதுவும் சமைக்க
பகைவர்களின் சூழ்ச்சியினால் ஆலயமும் அழிய
பயபக்தி மூதாட்டி பேழையதை ஒளிக்க
சகசக்தி சாங்காமல் மூதாட்டி பயந்து
சற்குருவை நாடியே சக்தியரை அளித்தார்.

4. அளித்ததொரு பேழையை வாத்தியாரும் கொண்டு
ஆரையூர் மத்தியில் கோயிலில் அமர்த்தி
களிக்கவே சடங்கு வழிபாடு இயற்ற
கண்கண்ட தெய்வமாய் விளங்கிவரும் நாளில்
விளிக்கவே நாவிதன் நாகனது கனவில்
விளங்கிடவே காவியம் செப்புமெனச் சொல்ல

தளிர் விழியாள் மகிமைதனை அனைவரும் உணர
தகவுடைய திருக்கதவு தானாகத் திறந்ததுவே.

5. தானாகத் திறந்திடவே தக்கோரும் பயந்து
தருமநெறி தவறாமல் தாயாரை நினைந்து
மானாகர் மகளுக்கு வரிசை முறையாக
மனமுருக வரலாற்றுப் பூசையது செய்ய
வினயமுடன் கலியாணக் காலதுவும் வெட்டி
விளங்கிடவே கோயில் அதில் குத்தியது நாட்டி
மனமுடைய பக்தர்கள் பலகாரம் சுட்டு
மணம் சிறக்க தேவிக்கு படைத்து வழிபட்டார்.

6. படைத்திடவே பலகாரம் பாணக்கம் பணியாரம்
பட்டுடுப்பு நகைநட்டு பூணாரம் பூமாலை
தடையறவே தந்துதான் திருமணமும் செய்ய
தக்கதொரு காலத்தைக் கணித்துத்தான் நிற்க
விடைகொடு கப்புவனார் வேசமது கொண்டு
விழாவிற்கு தலைமையது தாங்கியது நின்று
கடைகாணா காட்சியினைக் கண்காண வைத்த
ஆரையம்பதியிலுறை கண்ணகித் தாயே.

7. வைத்ததொரு காட்சிதனைக் கண்குளிரக் கண்டு
வைகுண்டம் சேர்வதற்கு புண்ணியமும் அடைய
அத்திருநாள் முடிவடைய கொல்லனின் சதியால்
அம்பிகையின் கணவராம் கோவலரும் படவே
சத்தியத்தின் நாயகியும் கோபமது கொண்டு
சதிராடி பாண்டியனைப் பதறவே அழித்து
எத்திசையும் அக்கினியால் மதுரையை எரித்திட்ட
ஆரையம்பதியிலுறை கண்ணகித் தாயே.

8. எரித்ததொரு கோபமது கனலாகத் தெறிக்க
ஏந்திழையும் இடைச்சேரி பறைச்சேரி செல்ல
விரித்ததொரு தலையாக வந்த பத்தினியை
விளங்கிடவே அன்பாக ஆதரித்துப் போற்ற
கரிகுழலால் கண்ணகையும் கோபமது ஆற
குளித்துநீர் ஆடியே அம்மையரும் குளிர்ந்து
சரித்திரத்தின் நாயகியாய் ஆலயத்தில் அமர்ந்த
ஆரையம்பதியிலுறை கண்ணகித் தாயே.

9. அமர்ந்திருந்த காலமதில் அர்ச்சகர்தானும்
அம்மையரின் பேழையைத் திறந்துதான் பார்க்க
மமதையினால் செய்த பிழை பொறுக்க வொண்ணாமல்
மலர்விழியாள் கண்ணொளியை பறித்துதான் போக
தமது பிழை அறிந்ததனால் கண்ணம்பி தானும்
தலைகுனிந்து அம்மனையே வழிபட்டு நிற்க
இமையமெனப் பெரும் அருளைக் காட்டும் அருட்சக்தி
ஆரையம்பதியிலுறை கண்ணகித் தாயே.

10. காட்டுகின்ற சித்துக்கள் மேலும்தான் சொல்ல
கணக்கெடுக்க முடியாமல் போகின்றதம்மா
வீட்டுக்குள் இருந்திட்ட மக்கள் எல்லோரும்
விளங்குகின்ற உடுக்கொலியின் அரவம்தான் கேட்டு
சட்டெனவே எழுந்துமே சென்றுதான் பார்க்க
சக்தியரின் ஆடலது என்றுதான் உணர்ந்து
மட்டட்ட சக்தியினை உணரத்தான் செய்த
ஆரையம்பதியிலுறை கண்ணகித் தாயே.

11. உணர்ந்துதான் அருள்புரியும் அன்னையரும் நீயே
உத்தமர்கள் மதிக்கின்ற தெய்வமும் நீயே
கணக்கற்ற செல்வங்கள் தருபவளும் நீயே
கதியற்றோர் வாழ்வதனைக் காத்தவளும் நீயே
பிணக்கில்லா மேன்மையதை அளித்தவளும் நீயே
பேழையதில் வீற்றிருந்து அருள்பவளும் நீயே
சுணக்கமின்றி எமைக் காக்கும் சுந்தரியும் நீயே
ஆரையம்பதியிலுறை கண்ணகித் தாயே.

12. கண்ணகியாய் மாங்கனியில் வந்துதித்தாயே
கற்புடைய பத்தினியாய் துலங்கி நின்றாயே
மண்ணுள்ளோர் நலம் பெறவே அருளளித்தாயே
மக்கள் மனை செழிக்கவே விளங்கி நின்றாயே
விண்ணுலகோர் போற்றிடவே வாழ்ந்து வந்தாயே
விடிவெள்ளியாகவே பரந்து நின்றாயே
உண்மை நெறி செழிக்கவே அறம் வளர்த்தாயே
ஆரையம்பதியிலுறை கண்ணகித் தாயே.

13. அறம் வளர்த்த அன்னையரும் கோவலரும் வாழி
அருகிலிருந்து அருள் கொடுக்கும் கந்தவேலும் வாழி
திறமாகத் தொண்டு செய் அடியவர்கள் வாழி
திண்மையதாய் பூசைசெய் கப்புவர்கள் வாழி
மறவர் புகழ் ஓங்கிவளர் ஆரையம்பதியும் வாழி
மங்காத புகழ் படைத்த குருகுலத்தோர் வாழி
இறைவியரைத் தொழுகின்ற உலகத்தோர் வாழி
இத்தரையில் மானிடர்கள் என்றென்றும் வாழ வாழியவே.

மு.கணபதிப்பிள்ளை (முனாக்கானா)

1. மகராணி யாமுலக நாச்சியவ ளாண்ட
மண்ணேறு முனைவாழ்ந்த மக்கள்துயர் தீர்த்தாய்
சிவலோக பரலோக தெய்வம்நீ என்று
இனமோடு மதங்கடந்த தேயுனைத் துதிப்பார்
தவவாழ்வு தெரியாத நாயனே னுந்தன்
தாளதை நினைக்காத பாவிநான் வேறு
கதியேது மில்லாமல் தவிக்கிறேன் னம்மா
கலைமேவு மாரையூர் கண்ணகைத் தாயே

2. பத்ததிகள் முறையென்றும் தெரியாம லுந்தன்
படிகடக் காததோர் பத்தக்கட் டாடி
நித்திரைசெய் வேளையில் கனவிலே வந்து
நீநாளை வந்ததுமே பூசைசெய் என்றாய்
உத்தரவுப் படிகோயில் கதவடியில் நிற்கவே
உன்கோயில் கதவது தானாகத் திறந்து
பத்ததி முறைப்படி பூசைநடந் ததுவும்
பத்தினித் தாயேயுன் கிருபை தானம்மா

3. ஆனாவும் தெரியாத நாவிதன் தன்னை
அழகுதமிழ் மொழியிலே அறிஞர்களும் போற்ற
தேனான காவியம் பாடலைத் தாயுன்
திருவருளுக் கிண னயேது வரமருளுந் தாயே
மீனினம் கவிபாடும் வாவிவழி படகில்
மிகுசைவர் பதிமஞ்சம் தொடுவாய்ப் பதிக்கு
தானாக விரும்பியே நீ அங்கு சிலநாள்
தங்கியிருந் தருள்செய்த தாயே கண்ணகையே

4. அன்னைசிவ காமிஉமை ஆதிபரா சக்தி
அகிலாண்ட நாயகி ஆனகண் ணகையே
இன்னலது உற்றபோ தெண்ணிமனம் நொந்து
என்தாயின் திருக்கோயில் வீதிவலம் வந்து
முன்னாலே நின்றழுது கண்ணீர் சொரிந்தாய்
முழுமதி முகம்காட்டி துயரது துடைப்பாள்
இன்னுமேன் தாமதம் எழிலாரை யூரில்
இருந்தருளும் கண்ணகையின் தாள் பணிந் திடவே

# ஆரையம்பதி கண்ணகி அம்பாள் காவியம்

ஆரையூர் அருள்

1. அரசியல் பிழைத்தோர்க்கறம் கூற்றாகுமென்றும்
அரிவையர் கற்புநெறி ஆன்றோர் போற்றுவரென்றும்
ஊழ்வினை உருத்து வந்தூட்டும் என்றும்
காட்டுதற்குக் கயிலயங் கிரிவிட்டுநீங்கி
நூலேணியிலிறங்கி மாறன் மாமரக்கனியாகி
பால்தெறிக்க வைத்தவன் நெற்றிக்கண்போக்கி
நீதிநிலைநிறுத்திய கண்ணகை காவியம்பாட
சமாதுப்பிள்ளையாரே காத்தருள வேண்டும்.

2. காத்திடு கறைக்கண்ட பரமனும்மாலும்
கூர்வேலேந்து குமர குருபரனும்
சீருடை யயனும் வாலசரஸ்வதியும்
ஊருறை காவல்புரிகின்ற தெய்வங்களும்
ஆரையம்பதியமர் கண்ணகையும் மகிழ்ந்து
நேர்த்தியாயிக் கவிதை யார்த்திடவருள்
அளித்தனு தினமுமுதவியாக விருந்து
காத்திடப் பாதமலரைப் பற்றுகின்றேனே.

3. பற்றோடுபுகழ் செல்வமானாகர் மகள் நீயே
நற்கீர்த்தி மாசாத்துவான் மருமகள் நீயே
அட்டலெட்சுமி அமிர்தயோக சுபவேளை
கட்டழகு கோவலர் கரம்பற்றியவநீயே
மண்டேறி வழக்குரைத்து மாழாதுநீதி
குன்றாது காத்திட்ட பூவையும்நீயே
திக்கெட்டும்மிளர் ஆரையம்பதி வந்தமர்ந்து
மிக்கவருளாட்சி செய்யன்னை நீயே

4. அன்னையேயம் புவியிலெமையாள் பவநீயே
அன்றிடு நோய்பிணிகளகற்றுபவ நீயே
அட்டதிக்குமொளியளி அமரசோதி நீயே
எட்டெழுத்தட்சரத்துள் ஒளிர்பவ நீயே
உம்பர்தொழு தேற்றம்பிகை நீயே
தும்பிமுக கணபதியன்னையும் நீயே

ஆதிபராசக்தி ஆணவளும் நீயே
ஆரையம்பதி யமர்ந்தருள் கண்ணகைத்தாயே

5. மண்ணேறுமுனையில் பேழையொதுங்கியதும் பொய்யோ
சின்னவாத்தியார் கோயிலில் வைத்ததுவும் பொய்யோ
கண்ணானமாமதுரை சுட்டதுவும் பொய்யோ
கள்ளியம்பிட்டியை எரித்ததுவும் பொய்யோ
கன்னிநம்பியுன்பேழை திறந்ததுவும் பொய்யோ
மின்னலெனவொளிப்பிழம்பு கண்பறித்ததுவும் பொய்யோ
ஆடிமாதத்திலுடுக்கடித்து மகிழ்ந்ததுவும் பொய்யோ
ஆரையம்பதியில் ஆலயமமர்ந்த கண்ணகையே

6. பொய்யுலகில் மெய்த்தெய்வமானவுணக் கோலம்
பொற்சரடுவிட்ட பூவையாளே யோலம்
பார்புகழ் பத்தினியாளேயுனக் கோலம்
கார்முகில்வண்ணன் தங்கையுனக் கோலம்
ஒளிமேவு ஆதியந்தரியானவளே யோலம்
ஓதரியகலைஞானம் தருபவளே யோலம்
ஆதியேசோதியே நீதியானவளே யோலம்
ஆரையம்பதிவாழ் கண்ணகையேயுனக் கோலம்

7. மாதவிகேட்டபடி கோவலன் தானும்
பொற்பாவை சமைத்துயிரூட்டியது பொய்யோ
கற்புடை கண்ணகை உந்தனருளால்
பொற்பாவைதீப்பிடித்து எரிந்ததுவும் பொய்யோ
காற்சிலம்பொன்றைக் கோவலர்க்களித்தது பொய்யோ
கவலையறத்தொழில் செய்யச்சொன்னது பொய்யோ
ஆயர்சேரியிலடைக்கலம் ஆனதுவும் பொய்யோ
அண்டம்புக லாரையம்பதிக் கண்ணகையே.

8. பாண்டி மன்னன் நெற்றிக்கண்மறைத்தது மெய்யே
பாண்டிதேவி மழலையுனையணைத்தது மெய்யே
மறையோருரைப்படி பேழையிலடைத்தது மெய்யே
நிரையலைவைகையாற்றில் விட்டது மெய்யே
கண்டெடுத்தமானாகரைப் பார்த்து நீயும்
கண்ணால்நகைத்து கண்ணகையானது மெய்யே
என்றுமான்மீகப் பூப்பூத்து மணம்வீசு
வாரையம்பதியாலய மமர்ந்ததும் மெய்யே

9. பூசைசெய்முறை யுரைத்ததாயேயுனக் கோலம்
புலவரைக்காவியம் பாடவைத்ததாயே யோலம்
ஏட்டில்எழுத்தாணியா லெழுதவைத்ததாயே யோலம்
பாட்டினிலே பாவாயமமைந்தாயே யோலம்
வேப்பிலையால் வேதனைகுறைப்பவளே யோலம்
வேண்டும்வரமளித் தருள்பவளே யோலம்
தேனாகச்செந்தமிழில் தித்திப்பவளே யோலம்
பேரானவாரையம்பதிக் கண்ணகையே யோலம்

10. மதுசூதனன் தங்கையாகி வந்தாயே
மதுரை மாநகரெரித்து வந்தாயே
நீதிதன்னை நிலைநிறுத்தி வந்தாயே
ஆதியேயேழையெமை ரட்சிக்க வந்தாயே
அகிலமதிலறம் வளர்க்க வந்தாயே
அனைவரத கல்யாணியாகி வந்தாயே
அரனோடு சரிபாதியாகி வந்தாயே
ஆரையம்பதி யாலயம் அமர்ந்ததாயே.

11. ஆதிசக்தி அபிராமிஅன்னையே யோலம்
பாதிமதிசூடு பரன்தேவியே யோலம்
ஈசனிடம்வரம்பெற்று வந்தவளே யோலம்
ஈஸ்வரியாகி மாறனைவதைத்தாயே யோலம்
ஏதிலார்க்குயிரங்கு எம்தாயே யோலம்
கோதுகுழலழகு கோதையாளே யோலம்
ஆண்டுக்கொருதிங்கள் வருபவளே யோலம்
ஆரையம்பதியுறைந் தருள்பவளே யோலம்

12. எங்கள்மனையிடர் தீர்க்க வந்தாயே
பொங்குபுதுப் புனலாகியின்ப மளிக்கவந்தாயே
சக்கரநாரணன் தங்கையாகி வந்தாயே
எங்கும் நிறைசோதியாக வந்தாயே
நீதிநிறைசிலம்புச் செல்வியாக வந்தாயே
ஓதுமறையோருள்ளத் துறைந்து வந்தாயே
கற்புடை கண்ணகையாக வந்தாயே
பொற்புடை யாரையம்பதியி லமர்ந்தாயே

13. நோய்பிணிகள்வருவினைகள் அனைத்தும் களைந்து
நேயமுடன் நேசிப்போர் மனதிலேநிறைந்து
காசினியில் வைகாசிதிங்களில் வந்து
ஆசியுடன் அடியவர்க் கருளளித்து
கட்டழகு கோவலர்க்கு மனைவியாகி
இப்புவியில் பாலமிர்தம்உண்ட கண்ணகையே
ஆரையம்பதியில் அன்புடன் அமர்ந்தாயே
ஏழையான் பாடினேன் பிழைபொறுத்தாள்வாயே.

14. ஏர்வாழி என்றும் பொழிகார்வாழி !
ஊர்வாழி உலக உயிரணைத்தும்வாழி !
வேதமும் ஆகமமும் விளங்கிடவாழி !
ஓதும் கலைஞானம் ஓங்கிடவாழி !
கற்புடை மாதர் காலமெல்லாம்வாழி !
செவ்விய செந்தமிழ் செகமெலாம்வாழி !
திவ்விய குருகுலத்தோர் சேர்ந்தென்றும்வாழி !
எங்குமென்றும் சமநீதி சமத்துவம்வாழி !

15. விகடசக்கர வித்தக விநாயகர்வாழி !
கரியநிறக் கண்ட னோடுமையும்வாழி !
ஆழிமழைக் கண்ணன் அச்சுதன்வாழி !
நான் முகனோடு சரஸ்வதியும்வாழி !
ஆதிவைரவரோடு பரம ஐயனும்வாழி !
காளிபேச்சி மாரியோடு நரசிங்கனும்வாழி !
அழகனென ஆலயமமர் கந்தனும்வாழி !

1. பத்தினித் தெய்வமெனப் பாரதுபோற்றும்
உத்தமி கண்ணகை வித்தக மோத
குஞ்சர முக் கணபதி குருபரனும்
கங்கை சடையணி நஞ்சுண்ட சிவனும்
அங்கமதில் பாதியாயமர் பார்வதியும்
பங்கய சரஸ்வதி பச்சைமாலயனும்
கங்காள வைரவ வள்ளிதெய்வயானையும்
வந்து வேண்டிடு வரமருள்க் காப்பாமே

2. வேண்டிடு செல்வம் மிகுந்தோங்கு புகழ்
கொண்டிலங்கு மானாகர் மகளாகி
நெற்றிக் கண் ஒளித்து மாறனை அழித்து
மாமதுரை சுட்டெரித்து கனலது தனித்து
அன்புருவா யாரை நகர் வந்தமர்ந்து
என்றுமே யூரையிதமாகக் காத்து
பண்டு தொட்டுச் சடங்கு கொண்டருள்
பத்தினியே யுன்பாதம் மறவோமே

3. பாதச் சிலம்பெடுத்துக் கோவலர்க் களித்து
மாதவி கடன் தீர்த்து வானிபம் செய்து
நேர்த்தியாய் வாழ்வினி நாம் வாழ்வோமென்று
வார்த்தையா லாறுதல் கூறினாயன்று
பாண்டிநாடு சென்று விற்றுவரவென்று
பத்தாவுனை யழைத்து சென்றார் துணைகொண்டு
ஆயர்பாடியில் அடைக்கலமான கண்ணகையே
ஆரைநகர் அமர்ந்தருளும் அம்மையே

4. அருளான மாசாத்தாருக்கு மருமகள் நீ
கருணை மழைபொழிந்து காப்பவ நீ
திருநிறை கோவலர்க்கு மனையாள் நீ
வருநோய் பிணியழித்து வாழ வைப்பவ நீ
வெருவுதலின்றி மாறன் வெற்றிவிழி யழித்த நீ
தருமருபு மிதழழகு சக்தியன்னை நீ
பாரைநிகர்பக்தி யுள்ளம் கொண்டு நிறை
ஆரைநகர் வாழ்கின்ற அரிவை கண்ணகையே

5. அரிய கைலயங்கிரி மேவிவளர் பூரணியே
கரிய கறைக் கண்ட சிவன் நாரணியே
ஈரெட்டுக் கோணத்து லுறைகின்ற தேவியே
பாரெங்கும் பயின்று பணிகின்ற பார்வதியே
காலமெலாம் பாலாமிர்த நற்பூசைகொள்ளும்
கோலவிழி கோவைப்பழ விதழழகு கோதையே
ஊரோங்க உன்னருள் சூழ்ந்து விளங்கு
ஆரைநகர் கோயில்கொண்ட கண்ணகையே

6. கண்ணான காதலனைக் கொண்ட செய்திகேட்டு
திண்ணமாய் நீதி கேட்க வேகமாய் நடைநடந்து
கண்டதும் கார் குழலை விரித்தக் கலைத்து
துண்டான கோவலரை ஒன்றாய்ப் பொருத்தி
என்ன நடந்ததென்பதனை கண்ணாலறிந்து
மண்ணடலமறிய கற்பின் பொற்புப் காட்டி
செந்தமிழர் செறிந்த வாரைநகர்
வந்தமர்ந்த வன்னை கண்ணகையே

7. வன்மையுடன் மாமதுரை எரித்தது பொய்யோ
தட்டான் தவறறிந்துயிர் விட்டது பொய்யோ
பாண்டிமா தேவி பதைபதைத்து மாண்டது பொய்யோ
கொற்றைக் குடை குடைசாய்ந்தது பொய்யோ
தப்பிதமறிந்த சபையோர் மலைத்தது பொய்யோ
கற்பின் திறம் கண்டுரே போற்றியது பொய்யோ
கற்சிதமாய் யாரையூரில் கோயில் கொண்டு
அற்புத அதிசயங்கள் காட்டியது பொய்யோ

8. காட்டிடுவாய் கருணை கண்ணாயிரத்தி
நாட்டிலெங்கும் உனக்கு வைகாசித் திங்கள் குளுத்தி
ஆடிக் குளிரவைக்க அளிப்பாய் உயர்ச்சி
ஆண்டுதோறுமே யளிப்பா யருளாட்சி
வேண்டும் வரங்கள் கொடுத்திடு மாட்சி
வேறெங்கு மென்றும் காணமுடியாத காட்சி
கண்டு கலிகொள்ள வாரைநகர் சாட்சி
யென வந்தமர்திருக்கின்றாய் கோலதோட்சி

9. இருக்கின்ற எல்லையில் முன்னாள் முருகன் கோயில்
ஈசானத்தில் வள்ளிக்கு தனிக்கோயில்
வடக்கிலே அண்ணன் கண்ணனுக்கு கோயில்
வாயுமூலையில் சமாதிப் பிள்ளையார் கோயில்
சூழ்ந்தமர்ந்து ஊரதனைக் காக்கும்
மாண்பு எங்கும் ஆத்மீக அருள் பூக்கும்
வண்ண மாரைநகர் பதிதனிலே வந்து
திண்ணமா யமர்ந்திட்ட கண்ணகையே

10. கண்ணனின் சகோதரியே யுனக்கோலம்
முக்கண்ணன் தேவியே யுனக்கோலம்
சித்தி விநாயகர் அன்னையே யோலம்
சித்திர வேலன் மாதாவே யோலம்
ஓதக் கடல் தாண்டி வந்தவளே யோலம்
ஓதும் கலைஞான வுட்பொருளே யோலம்
ஆயிரம கண்கொண்ட அம்பிகையே யோலம்
ஆரைநகர் கண்ணகையே யோல மோலம்

11. ஓலமிட்டு வந்த கள்வரை சிலையாக்கியது மெய்யே
ஒதரிய வூர்காடு தாண்டி வந்தது மெய்யே
பாதகம் செய் பாண்டியனைக் கொன்றது மெய்யே
மாமதுரை தீமூளச் சாபமிட்டது மெய்யே
இடச்சேரியர்க் கின்னருளளித்தது மெய்யே
பறச்சேரி வேகாமல் காத்தது மெய்யே
அருளோங்கு ஆரைநகர் வந்தமர்ந்து
கருணையோடு காத்தருள் கண்ணகை மெய்யே

12. மும்மாரி பொழிந்து இப்புவி யென்றும் வாழி
வந்தாரை வாழவைக்கும் மட்டுநகர் வாழி
செம்மையுடன் வேதாகமங்கள் வாழி
செலுமையுடன் கன்னியர் கற்பதுவும் வாழி
செந்நெல் பொலிந்து செகமெல்லாம் வாழி
தக்க தமிழ் புலவர் பெரியோர்கள் வாழி
சீரோடு சிறப்புற்று செந்தமிழ் வாழி
பார்வாழி பண்பாடுகாரா ரைநகர் வாழி

13. கரிமுக கணபதியும் கந்தனும் வாழி
கரியுரி போர்த்த கறைக்கண்டன் வாழி
திருமாலயனோடு சரஸ்வதியும் வாழி
கருணைபொழி பரமஜயனர் வாழி
திருமேவு சமாதிப் பிள்ளையார் வாழி
அன்னை திருத்தொண்ட செய்யடியார் வாழி
ஊரெங்கும் அமர்ந்தருள் தெய்வங்கள் வாழி
ஆரைநகர் கண்ணகை வாழ்க வாழியவே.



# கண்ணகையம்பாள் காப்பு

அம்பாள் அடியாள்

1. ஆரையம் பதிவாழ் தாயே அருங்குணங் கொண்ட தேவி
ஊரையே எரித்தாய் செங்கோல் உலகினில் அறிய நீதி!
வேரையாம் மறக்க லாமோ வெம்பியே மன்னன் மாண்டான் !
பாரையே வியக்க வைத்த பத்தினித் தாயே காப்பு !

2. அரசனின் மகளாய் அன்று அவனியில் உதித்தாய் அம்மா
இரந்துனைக் கேட்கும் முன்பே ஈவது தானே உன்றன்
நிரந்தர குணத்தின் மேன்மை நிழலெனத் தொடரு கின்றாய் !
பரவசம் ஊட்டிக் காக்கும் பத்தினித் தாயே காப்பு !

3. துச்சமாய் எண்ணு வோர்க்கும் துணையென நின்றாய் அம்மா !
இச்சைகள் யாவும் தீர்க்கும் இணையிலாச் சக்தி உன்னால்
அச்சமும் வாழ்வில் இல்லை! அருமறைக் காட்டி னுள்ளும்
ஆரையம் பதியில் உறை பத்தினித் தாயே காப்பு !

4. கண்ணகைத் தாயே உன்றன் கைச்சிலம் பதனை அன்று
மண்ணிலே கவர்ந்த கள்வர் மனத்திரை கிழித்து இங்கே
உண்மையை உணர வைதாய் உத்தமி சபதம் வென்றாய் !
பண்பினால் உலகே மெச்சும் பத்தினித் தாயே காப்பு !

5. ஆண்டியாய் நின்ற போதும் அவனியில் நீதான் வேண்டும் !
வேண்டிய வரத்தை நல்கும் . வேல்விழி யாளே உன்னால்
காண்பவை யாவும் இங்கே கண்களுக் கின்பம் ஆகும் !
ஆரையம் பதியில் உறை பத்தினித் தாயே காப்பு !

6. கார்முகில் கலைந்து போகும் கண்ணகைத் தாயே உன்னால்
ஏர்முனை கொடுக்கும் செல்வம் எங்குமே செழித்தே ஓங்கும்!
நீர்நிலை தனிலும் உன்றன் நித்திய ரூபம் வாழும்
பார்புகழ் ஏந்தி நிற்கும் பத்தினித் தாயே காப்பு

7. வேப்பிலை ஆடை கட்டி வேண்டித்தீச் சட்டி யேந்திக்
காப்பெடுத் திங்கே வந்தால் கண்ணகை காப்பாள் என்றே
தோப்பிலே கூடிப் பேசித் தொண்டரும் நாடி வந்தால்
ஆரையம் பதியில் உறை பத்தினித் தாயே காப்பு!

8. கண்கவர் கணவன் தானும் கற்புடை யாளை விட்டு
மண்ணிலே பரதம் ஆடும் மாதவி பின்னே சென்றான்
எண்ணிலாத் துயரைத் தாங்கி ஏந்திழை வடித்த கண்ணீர்
தண்கடல் ஒக்கும் என்பேன் பத்தினித் தாயே காப்பு !

9. கற்புடை நாயகி உன்றன் கணவனாம் கோவ லர்க்கு
இற்றரை மீது வந்த இழப்பினை ஈடு செய்தாய்
நற்றவ வானில் தோன்றி நலம்மிகக் கொடுத்துக் காக்கும்
ஆரையம் பதியில் உறை பத்தினித் தாயே காப்பு !

11. காம்பினில் பூத்தி ருக்கும் கழுமலர் போல இங்கே
பூம்புகார் தனிலே தோன்றிப் புவியினைக் காக்க வந்தாய்!
வேம்பிலை தரித்தே இங்கு வேண்டிய வரத்தைப் பெற்றோம்
பாம்பையும் ஆட்டி விக்கும் பத்தினித் தாயே காப்பு!

10. அன்னையே உன்னை அல்லால் ஆறுதல் தருவார் யாரோ
பொன்னையாம் வேண்டோம் உன்றன் பொற்பதம் பணிந்தோம் நாளும்
நன்னிலை அடைந்து வாழ நலமெலாம் அருளு கின்ற
ஆரையம் பதியில் உறை பத்தினித் தாயே காப்பு !

12. பித்தனாய் அலைய விட்டும் பின்னைப் பிறப்ப றுத்தும்
எத்தரைத் தானும் காத்த இனிய வளேஎம் கண்முன்
நித்தமும் வந்து திப்பாய் நீடுநாம் வாழும் வாழ்க்கை
பத்தியிங் கெரியாதி ருக்கப் பத்தினித் தாயே காப்பு !

# கண்ணகை கவசம்

கவிக்கோ துரை வசந்தராசன்

கற்பின் நெருப்பே கண்ணகை தாயே !
பொற்பதம் பணிந்தோம் காத்தருள்வாயே !
உலகம் முழுதும் உன்குடை கீழ்வளர்
குலத்தைக்காக்கக் குளிரும் நெருப்பே
கலகம் சண்டை களவுகள் பொய்த்து
உலவும் நீதி உச்சியிலிருந்து
ஆண்டெம் குலத்தை அணைத்திருப்பாயே !
மாண்ட எம்குல மாண்புகள் செழித்திட
மீண்டும் எழுந்திட மேன்மைகள் பெருகிட
எடுத்தநல் காரியம் யாவினும் வெற்றி
எடுத்தே கொடுக்க எழுந்தருள் தாயே !
உம்மை யன்றி தெய்வம் வேறிலை
உண்மைத்தெய்வம் உயிர்நீவேறிலை
கண்ணகைத்தாயே காத்தருள் நீயே !
மாசாத்துவனின் மருமகள்தாயே
மாசுகள் அகன்றிடக் காத்துநிற் பாயே !
கால்க ளிரண்டில் சிலம்புகளலொலிக்க
கைகள ளிரண்டில் எமை நீ காக்க...
அரசியல் பிழைத்தோர்க் கறம் கூற்றாக்கி
கரந்துறை கசடுகள் கலங்கவைத் தாயே !
ஊழ்வினை வந்து உறுத்தும் என்றே
பாழ்வினை செய்ய பதறவைத் தாயே !
கற்பினை உலகோர் கைதொழுதேத்தவர்
சொற்றிரும் பாமையும் கற்பெனச்சொல்ல
பொற்புடைத்தாயே பொழிப்பு தந்தாயே !
தங்கக் கிண்ணப் பாத்திர மிருந்தும்
தங்கா தோடி நீதியை வென்று
எங்கும் நேர்மை எழுந்திட வேண்டி
பொங்கி யெழுந்த பொன்மகள் தாயே !
தொங்கு மெங்கள் தோழர் வாழ்க்கை
ஓங்கி ஒளிர்ந்திட ஒளிகொடுப் பாயே !
செங்குட் டுவனின் செந்தமிழ் வீரம்
எங்கிட் டிருக்கெனக் காட்டிய தாயே !
இங்குள தமிழர் இதயம் நுழைந்து

தங்கு தடையிலா வீரம் கொடுப்பாயே !
ஒற்றைச்சிலம்பால் உலகினை வெல்லும்
வெற்றிச் சிலம்பம் ஆடிய தாயே !
சுற்றம் சூழ உன்தாள் பணிந்தோம்
சுற்றிநின்றெம்மைக் காத்தருள்வாயே !
வேல்நிகர் அறிவும் வெற்றியும் வீரமும்
ஆல்போல் தழைத்திட அருள் தரும் தாயே !
நாள்படு துன்பம் நெருங்கா தோட
தோள்களில் தூக்கிக் காத்திருப் பாயே !
வரம்பெற வானம் வந்தும்மை வணங்க
பறந்தே ஓடிப் பரிசளித்தாயே!
நிரந்தரம் நீதான் ! நிரந்தரக் கருணை
நிரந்தரமாக நிறைத்திடு தாயே !
பாதம் பணிந்தோம் உன்னை யல்லால்
பாரினில் தெய்வம் வேறெது தாயே !
ஊரையும் உலகையும் நாட்டையும் காக்க
ஆரையம் பதியில் உறைந்திடுதாயே !
பொறுமையின் சிகரமே போற்றி ! போற்றி !!
பொறுமையின் நெருப்பே போற்றி ! போற்றி !!
வாதிடவந்து வென்றனள் போற்றி !
நீதியின் தெய்வமே போற்றி ! போற்றி !!
பத்தினித் தெய்வமே போற்றி ! போற்றி !!
நத்தும் எமைநீ காக்கிறாய் போற்றி !
சித்துவிளையாடா தெய்வமே போற்றி !
சித்தமெல்லாம் நிறைந்தாய் போற்றி !
தாயே போற்றி !தமிழே போற்றி !
தாய்த்தமிழ் தெய்வமே போற்றி ! போற்றி !!

# கல்யாண கூறைதாலி பாட்டு !

மூ.அருளம்பலம் (ஆரையூர் அருள்)

தந்தானத் தான தன்னா – தனம் தனம்
தந்தானத் தான தன்னா

ஆரைப்பற்றை பாகை கூடி - எங்கள் ஆரணங்காள் கண்ணகைக்கு
கூறையுடன் தாலி - கோவிலை நாடியே கொண்டுவாறோம்.

மானாகர் தன்மகளாம் கண்ணான மான்விழியாள் கண்ணகைக்கும்
மாசாத்துவார் மகனாம் வடிவழகுக் கோவலச் செட்டியர்க்கும்.

பேரான கோவலர்க்கும் - பேரழகு வாலைமின்னாள் கண்ணகைக்கும்
நேராக மணம்முடிக்க – நேர்த்தியாய் கூறை தாலிகொண்டுவாறோம்.

அன்னமின்னார் கூடி எங்க - தங்க சேயிளையாள் கண்ணகைக்கு
பொன்னா பரணமோடு - மின்னிடும் கூறைதாலி கொண்டுவாறோம்.

வண்ணவண்ண ஆடையுடன் வடிவமைத்த ஆபரணமணிந்து
கோவலனார் சுற்றமுடன் கூடி கூறைதாலி கொண்டுவாறோம்.

தவிலோசை தானொலிக்க – குரவை குயிலோசையை ஜெயிக்க
கவினுறு நடை பயின்று - கன்னியர்கள் கூறைதாலி கொண்டுவாறோம்.

பையரவ மணியெடுத்து - பட்டை தீட்டி பசும்பொன் சிலம்பமைத்து
மைவிழியாள் கண்ணகைக்கு – ஊர்கூடி வதுவை செய்ய வாறோம்.

மத்தாள உடுக்கையுடன் பேரிதவில் வாகான முரசொலித்து
கைத்தாள மிட்டுமே கண்ணகைக்கு கலியாணம் செய்யவாறோம்.

தாரை தம்பட்டமுடன் - சங்கு வாத்தியங்களும் முழங்க
ஆரைப்பற்றைப் பாகை கூடி - ஒன்றாய் கூறை தாலி கொண்டுவாறோம்.

தவிலோசை செவிக்கினிக்க - கொட்டும் குரவையொலி இதமளிக்க
நாவிவிழிக் கண்ணகைக்கு – ஊர்கூடிக் கல்யாணம் செய்யவாறோம்.

பட்டுப் பளபளக்க அரைத்த மஞ்சள் பொட்டுக் கமகமக்க
தட்டும் தவிலோசை நெஞ்சைக் கொஞ்சி தொட்டு நெகிழவைக்க.

பளீரப் பளீரெனவே கட்டி வைத்த பட்டாசி வெடிமுழங்க
களிப்புடன் பாடியாடி - நாங்கள் கூறை தாலி கொண்டுவாறோம்.

கொட்டு முழக்கமுடன் - கன்னியர்கள் குரவை ஒலிமுழங்க
எட்டுதிக்கும் விளங்க - எல்லோருமாய் கூறை தாலி கொண்டுவாறோம்.

மங்கள மஞ்சளுடன் எழில் மிஞ்சு குங்குமமும் தான் ஜொலிக்க
திங்கள் முகத்தழகி - கண்ணகைக்கு கூறை தாலி கொண்டுவாறோம்.

பாவையர்கள் குரவையிட - பண்பான பூவையர்கள் வாழ்துரைக்க
கோதையாள் கண்ணகைக்குக் கூடி ஒன்றாய் கூறை தாலி கொண்டுவாறோம்.

தேவர்கள் வாழ்த்தொலியும் - தித்திக்கும் தேனான பாட்டொலியும்
கேட்டு மகிழ்வுடனே - கண்ணகைக்கு கூறை தாலி கொண்டுவாறோம்.

மேள தாளமுடன் மெத்த - நல்ல நாதஸ்வரம் மொலிக்க
பூவையாள் கண்ணகைக்கு புதுக் கூறை தாலி கொண்டுவாறோம்.

கிளிமொழியாள் கண்ணகைக்கு - கிள்ளை மொழிப் பிள்ளைகள் பாடிவர
வழிநெடுக வாழ்த்துரைக்க - கூடிக் கூறை தாலி கொண்டுவாறோம்.

கொஞ்சும் சதங்கையணி இளமை விஞ்சு கோதையர்கள் கூடியொன்றாய்
மஞ்சள் முகத்தழகி - கண்ணகைக்கு மாங்கல்யம் கொண்டுவாறோம்.

சிவனார் திருமாலும் திருக்கயில தேவர் முனிவர்களும்
முப்பெரும் தேவர்களும் - வாழ்த்துரைக்க கூறை தாலி கொண்டுவாறோம்.

இந்திரன் இருஷிகளும் முந்து - நல்ல பக்திபுரி சித்தர்களும்
வந்திங்கு வாழ்திடவே நாம் - கூடிக் கூறை தாலி கொண்டுவாறோம்.

நால்வேத சாஸ்திரங்கள் நற்றமிழில் நாலாபுறமு மொலிக்க
வேல்விழியாள் கண்ணகைக்கு – விசேட கூறை தாலி கொண்டுவாறோம்

முப்பத்து முக்கோடி - சித்திநிறை தேவர்களும் வாழ்துரைக்க
தற்பரியாள் கண்ணகைக்கு - சந்கேதாசமாய்க் கூறை தாலி கொண்டுவாறோம்

# கண்ணகை துதி

சக்தி ஸ்ரீ. வி. பரிபூரணானந்த முதலியார்

மட்டக்களப்பெனும் மண்முனைப்பதியில்
ஆரையம்பதியும் ஆன்றோர் வசிக்கும்
ஊரக மத்தியில் உணர்வுடன் சிறந்த
குருகுல மக்கள் செறிந்து வாழும்
காத்தான் பதித்த வேலோடு விளங்கும்
கந்தன் ஆலய அருகில் அமர்ந்து
கண்ணகி என்னும் பத்தினித் தெய்வமாய்
கற்புடை நங்கையாய் கால்பதித்து இருந்து
குற்றம் செய்யும் குறுகிய மனதோர்
நற்றவம் அடைய நல்வழி காட்டி
வம்பு வழக்குகள் வராமல் காத்து
நம்பின மக்களை நன்றெனச் சேர்த்து
நானிலம் தன்னில் நீடிய புகழாய்
நீண்ட ஆயுளும் நிறைதரு சுகமும்
கண்ணகித்தாயே கணக்கில்லாது அருள்வாய்
காமக்கசடுகள் களைந்தருள் புரிவாய்
தாமஸக் குணத்தை தளர்வுடன் நீக்கி
இராட்சத குணத்தை இல்லாதொழித்து
ஊரார் போற்றும் உத்தமராக
உயர்ந்து விளங்க உண்மையாய் அருள்வாய்
போட்டி பொறாமை வஞ்சகத் தன்மை
ஓட்டித் துரத்தி ஒக்கறுத்திடுவாய்
தெரிந்து செய்யும் தெரியாமல் செய்யும்
வரிந்து கட்டி வல்லாண்மை செய்யும்
வண்மைக் குணங்கள் இழந்திடச் செய்வாய்
உண்மை அன்பராய் விளங்கிட நாளும்

மானார் மகளே மக்கள் வணங்கும்
தேனாய்ச் சொரியும் தேவியே எங்கள்
ஊனாய் உயிராய் இருந்திடும் காலை
உண்மை நெறியை உணரச் செய்வாய்
நாம்படு துன்பம் நானிலம் அறியும்
எம்துயர் போக்க ஏந்திழை வருவாய்
உன்தாழ் பணிந்து அழுதிடும் எங்களின்
இன்னா மறுமையை இல்லாதொழித்து
தனமொடு பலவும் தந்தருள் புரிவாய்
அம்மா தாயே அருளது வேண்டி
உன்பாதம் தன்னில் அடைக்கலம் புகுந்தோம்
தாயே சரணம் அம்மா சரணம்
சரணம் சரணம் அம்மா.

# கல்யாண கூறைதாலி பாட்டு 2

மூ.அருளம்பலம் (ஆரையூர் அருள்)

*தானானத் தான தன்ன தானா - தன்னத்*
*தானானத் தான தன்ன தானா*
*தானானத் தான தன்ன தானா - தன்னத்*
*தானானத் தான தன்ன தானா*

பாட்டு

1. ஆரைப்பற்றைப் பாகை ஒன்றுகூடி
கண்ணகைக்கு கூறைதாலி கொண்டுவாறோம் பாரீர்...
ஆரைப்பற்றைப் பாகை ஒன்றுகூடி
கண்ணகைக்கு கூறைதாலி கொண்டுவாறோம் பாரீர்...

2. மண்முனை பற்றின் மைய இதயம்
திருக் கண்ணான ஆரைநகர் உறையும்
கண்ணகைக்குக் கல்யாணம் செய்ய
நாங்க கூறைதாலி கொண்டு வாறோம் பாரீர் (ஆரைப்பற்றை...)

3. மஞ்சளோடு குங்குமமும் கொண்டு
மிஞ்சு வஞ்சியர்கள் கொஞ்சுநடை பயின்று
கஞ்சமலர் கொஞ்சும் முகவழகுக்
கண்ணகைக்கு கூறைதாலி கொண்டுவாறோம் பாரீர் (ஆரைப்பற்றை...)

4. மங்கள வாத்தியங்கள் முழங்க
நல்ல செந்தூரப் பொட்டழகு இலங்க
திங்கள் நிகரொளியாள் எங்கள்
கண்ணகைக்கு கூறைதாலி கொண்டு வாறோம் பாரீர் (ஆரைப்பற்றை...)

5. சுத்தமான தங்கம் தேர்ந்து எடுத்து
மிக்க கெட்டியான தாலிசெய்து முடித்து
பத்தரை மாத்து பசும்பொன் உருக்கி
மின்னு பட்டொளி பரப்ப சரடு முறுக்கி (ஆரைப்பற்றை...)

6. பட்டுப்பூச்சி பல்லாயிரம் வளர்த்து
அவை இட்டபட்டில் கூறை வடிவமைத்து
கட்டழகு தங்கச்சரிகை இழைத்து
மின்னும் கூறைதாலி கொண்டுவாறோம் பாரீர் (ஆரைப்பற்றை...)

7. மட்டில்லா வணிகர் கோவலர்க்கும்
எழில் கட்டழகி கயல்விழி கண்ணகைக்கும்
அட்டலெட்சுமி அமிர்தயோக மதில்
திட்டமுடன் திருமணம் முடிப்பதற்கு (ஆரைப்பற்றை...)

8. கல்யாணக் கால்வெட்டி நட்டுச்
சுற்றி உள்ளன்போடு பந்தலுமே கட்டி
எல்லை தோறும் வாழைகமுகு நாட்டி
நல்ல கலியாணம் முடிக்க வூரைக்கூட்டி (ஆரைப்பற்றை...)

9. தோரணங்கள் சோபனங்கள் கூற
இசை வாணரெல்லாம் சேர்ந்து புகழ்பாட
ஆரணங்காள் கண்ணகைக்கு நாங்க
இப்போ கூறைதாலி கொண்டுவாறோம் பாரீர் (ஆரைப்பற்றை...)

10. ஊர்வீதி மின்னலங்காரம் கண்டு
பார்வீதி விண்மீன்கள் நிற்கிறதே சொக்கி
தென்றலெனும் தேரேறித் தேவர் மிகு
சுகந்த மலர்கள் தூவி வாழ்த்த (ஆரைப்பற்றை...)

11. இந்திரர் தேவர் இரிஷிகளும்
ஒன்றி வந்துமே மணமக்களை வாழ்த்த
சுந்தரத் தமிழில் மந்திரமோதி
அந்தரி கண்ணகைக்கு திருமணம் முடிக்க (ஆரைப்பற்றை...)

12. கோவலர்க்குத் தூய பட்டு வேட்டி
மெல்லி கண்ணகை கால்விரலில் மாட்ட மெட்டி
கழுத்துக்கு வண்ண மணிமாலை
சின்ன இடுப்புக்கு வைரவொட்டியானம் (ஆரைப்பற்றை...)

13. வகைவகையாய் வானவேடிக்கை
கூடித் தொகைதொகையாய் கலைஞர் கேளிக்கை
தானினத் தானினத்தோடு கும்மியாட்டம்
காணத்தாவிவந்து கூடும் சனக்கூட்டம் (ஆரைப்பற்றை...)

14. காளையர்கள் ஆடும் காவடியாட்டம்
இளம் கன்னியர்கள் போடும் கோலாட்டம்

பாவணர் பாடிவரும் பாட்டுக்
கேட்டு பாலகர்கள் ஆடுறார் கரகாட்டம் (ஆரைப்பற்றை...)

15. முத்துச்சம்பா பச்சரிசி இடித்து மாவை
சக்கரைப்பாகோடு சேர்த்து குழைத்து
தித்திக்கும் அதிரசங்கள் சுட்டுக்
கட்டி கூறைதாலி கொண்டு வாறோம் பாரீர் (ஆரைப்பற்றை...)

16. முன்னாலே முகப்புத்தட்டி கட்டி
அதில் எழுதியிருக்கு பாரு விபரப்பட்டி
தன்னாலே அசைந்தாடு சரங்கள்
மாட்டி வண்ணமின் விளக்குகள் பூட்டி (ஆரைப்பற்றை...)

17. பத்தாதி முறையில் பூசை இயற்றிப்
பய பக்தியோடு பணிவிடைகள் நடத்தி
கல்யாணக் கால்சுற்றி வளைத்து முடிந்து
கல்யாணப் படிப்பு படித்து (ஆரைப்பற்றை...)

18. ஓதும்மறையோர்கள் மந்திரமோத
அங்கே ஓமம் வளர்த்துத் தாலிகட்டி
அம்மி மிதித்து அருந்ததி காட்டி
கோவலரை கண்ணகைக்கு மணவாட்டியாக்கி (ஆரைப்பற்றை...)

19. திருமணம் இனிதாய் நடந்த
பின்பு அங்கே கல்யாணச் சபைநடத்தி முடிக்க
ஆழகான வெற்றிலைத் தாம்பூலம்
மடித்து நாங்க எடுத்து வாறோம் கூறைதாலிப்பெட்டி (ஆரைப்பற்றை...)



# கண்ணகையம்பாள் அகவல்

சக்தி ஸ்ரீ. வி. பரிபூரணானந்த முதலியார்

ஆதிமுதலான வல்ல கணபதியே
சோதியரே தேவியரே பிரம்மாவின் பத்தினியே
முத்துவரம் பெற்ற மாரியரே மகேஸ்வரியே
மத்தரை அடக்கி மகிமையுற வீற்றிருக்கும்
மானாகர் மகளாம் கற்புடைய பத்தினியின்
ஆனதொரு நற்புகழை அன்பாகக் கூறிடவே
என்னோடு குடியிருந்து வாக்கருள வேணுமம்மா
நற்கல்வி கற்பித்த நல்ல குருநாதனாரும்
நற்புத்தி தந்து நயந்துதான் காக்க வேண்டும்
கோவலனார் தேவியரே உன்கதை நான் படிக்க
காவலாய் நீ இருந்து கருணை மழை பொழிய வேணும்
பாண்டியனின் செருக்கை அடக்கவே நீ நினைந்து
கண்ணகியாக மாங்கனியில் உதித்த மாதாவே
காசினி மக்களின் கடும்துயர் போக்க
தேசத்தில் உள்ளோர் உன்னடி வணங்க
தேவர்கள் எல்லாம் போற்றி வணங்க
பண்டைய நாளின் தீர்வைத் துறையாய்
அண்டை நாட்டோர் அழகுறச் செய்த
ஆரையும்பதியும் இக்கிராமத்தில்
சூரனை அழித்த கந்தன் ஆலயம் அருகே விளங்க
குருகுல மக்கள் செறிந்து வாழும்
ஊரக மத்தியில் கோயில் கொண்டிலங்கும்
சத்தியத்தின் தேவியரே சதுராடும் பத்தினியே
இத்தரையில் பண்புடனே எல்லோரும் வாழுகின்ற
இப்பதியைக் காத்திடவே பல கோயில் கொண்டிலங்கும்
முப்பெரும் தேவிகளாய் மாரி காளி பேச்சி அன்னை
ஆதிவைரவர் பரமநயினார் ஆனைமுகக் கணபதியும்
ஆதிகுமாரத் தெய்வம் நரசிம்மர் முக்கண்ணனும்
சுகித்திருந்து மக்களுக்கு சுந்தரமாய் அருள் கொடுக்க

மகிடம் போல் விளங்கும் மங்கையராய் நீ
பேழையுள் இருந்து பொற்பொடு நீ விளங்கி
தழைதரு அருளை தந்திடும் தேவியும் நீயே
வைகாசித் திங்களில் நல்லதொரு திருநாளாம்
வைகறைப் பொழுதினிலே குளிர்த்தி நீராடியம்மா
தேகம்தான் குளிர தேசமெல்லாம் குளிரவைப்பாய்
கமுகு மரப் பாளையெல்லாம் கனதியாக விரும்பிடுவாய்
குமுத மலர்களெல்லாம் கண்ணெனவே விளங்கிடுமே
குங்குமத்தை நீ அணிந்து குலவிளக்காய் வீற்றிருந்தாய்
கன்னிமார் சூழ்ந்துவர கடுககெனவே பவனி வந்தாய்
தன்னிலை மறந்து நின்ற பக்தர்களுக்கு அருள் கொடுத்து
தம்மடியார் துயர்போக்க தக்கவளே நீவந்து
வம்மி மரநிழலினிலே வடிவழகி கொலுவிருந்தாய்
பழவர்க்கம் தேன் கரும்பு சாறெடுதடது பாணக்கம்
விழுங்கிடவே நாம்படைத்தோம் விரும்பியே ஏற்றிடுவாய்
பாணக்கம் தான்குடிக்க பழவினைகள் மாந்திவிடும்
வீணர்கள் உள்ளமெல்லாம் விரைவாகக் குளிர்ந்திடுமே
மடைகள் பல பரவி மண்டியிட்டோம் மாதாவே
தடையேதும் வாராமல் தக்க வழி காட்டிடுவாய்
உருவேறத்திருவேற உத்தமியே வந்து நின்று
வருகின்ற மக்களுக்கு நல்லவரம் ஈந்திடுவாய்
காளிமாரியென பேச்சியாகி நின்றவளே
ஊழிக் காலமதில் உண்மைச் சொருபமதாய்
கும்பத்தில் கொலுவிருந்து காக்கவென்று வந்தவளே
நம்பின மக்களுக்கு நயந்துதான் வரமளிப்பாய்
கரகமெடுத்து காற்சிலம்பு கலகலக்க
விரைவாக வந்து வினைகள் பல தீருமம்மா
துன்பங்கள் பலவந்து தவித்து நிற்கும் எங்களுக்கு
இன்பநிலை தந்தருள்வாய் வையகத்தில் நாம் வாழ
செய்தபிழை அதிகமுண்டு தேவியரே நீயறிவாய்
மெய்யுணர்வு தான் பெற்று மேன்மையுற வாழ்ந்துவர
உய்யவழிகாட்டி கற்பரசி காருமம்மா
ஆரையம்பதியமர்ந்த அம்பிகையே சரணமம்மா
ஊராள வந்த உத்தமியே சரணமம்மா

மாதம் மும்மாரி மழை பெய்ய சரணமம்மா
பாதம் தொழுது நின்றோம் பார்வதி சரணமம்மா
காச்சல் நோய் பிணிகள் களைந்திட சரணமம்மா
கூச்சல் குரவையிட்டு கும்பிட்டோம் சரணமம்மா
சரணம் சரணமென்று தாழ்பணிந்தோம் உன்பாதம்
காராள தேவியரே காத்திடம்மா எங்களையே.



கவிஞர் பால கம்சன்

1. சந்தனமாங் கனியே சிவந்தசெங் கதிரே
செங்கோட்டுமா அளித்த சந்தனச் சிலையுருவே
கஜபாகுபற்றிச் சிலம்பச் சிலை தானலம்ப
வெற்றிச்செழிய கஜாசன சந்தனப் பலகையமர்ந்து
வேதாரணியக் கப்பலேறி அருளே சுரந்தவளே
கடல்சூழ்இலங்கை காரைநகர் கால்பதித்த கற்பகமே
கற்புநெறி மாறாப் புவியில் போற்றிசைக்க
ஆரையம்பதி கயலிசை தென்நாட்டுக் குலக்கொடியே.

2. தெம்மாங்கனி மழலையாய் மலர்ந்தகண்ணே எம்மாதே
தேங்காய்க் கொட்டுக்குள் தேவிநீ ஒளிந்திருந்து
பேழைப் பேரொளியாய் பரிபூரணம் காட்டினலே
மண்முனை வளம்செறி மகிமைகாணா சித்திரமே
கனலாக்கி அங்குதாயே இருப்பிடத்தை மாற்றினலே
காத்தநகர் அமர்ந்தருள கந்தராலயம் சென்றவளே
வைகாசிவளர்பிறை நன்நாளில் விழாக்கோலம் பூண்டவளே
ஆரையம்பதி கயலிசை தென்நாட்டுக் குலக்கொடியே.

3. ஒற்றைச் சிலம்பும் ஒருகையிற் சிறுகுலையும்
நிற்கும் நிலையும் நீதியின் இருப்பிடமும்
கற்புடை மாமாதே எம்கண்ணே கண்ணகையே
அழியும் மாமதுரை என்றல்லோ பழிசுமந்து
அலைகடலில் மிதந்து தத்தித்தாவிக் குதித்து
காவேரிப் பூம்பட்டணத்தில் பேழையாய் தவழ்ந்து
செட்டியார் குலத்தில் பிள்ளையாய் வளர்ந்தாயே
ஆரையம்பதி கயலிசை தென்நாட்டுக் குலக்கொடியே.

4. கண்ணகைக்கு காலம் நன்றாய் கனிந்திடவே
திருக்கல்யாணம் திங்கட்கிழமை என்றே மொழிந்தனவே
திருமணமது முடிக்க பதினாறு காலில்பந்தலிட
அமிர்தயோக முகூர்த்தவேளை தேவர்மூவர் வாழ்த்தவே

மாசாத்தானின்ற கோவலரை திருமாங்கல்ய தாரமாக்கினலே
நாகமணி காற்சிலம்பை அணிந்த பூங்கோதைகண்ணகை
நல்லறம்காட்டி இல்லறம் சிறப்பாய் வாழ்ந்தனரே
ஆரையம்பதி கயலிசை தென்நாட்டுக் குலக்கொடியே.

5. மாதவி நடனமாடி மதிமயங்கி கோவலர்
திரவியங்கள் தீரனைத்தும் கண்ணகையோர் காற்சிலம்பை
தென்னவனூரில் கூவி விற்க விலைகூற
தேவியின் காற்சிலம்பை திருடிய கள்வனிவனென்று
காதை தெரியாத பொற்கொல்லர் இச்செய்திகேட்டு
வாதைபெறு வனமதில் மன்னனிடம் விடைகொண்டு
வாகையோடு சிரமது துணிந்து விட்டனரே
ஆரையம்பதி கயலிசை தென்னாட்டுக் குலக்கொடியே.

6. ஏந்திழை பாண்டிமா மன்னன் முன்நிற்க
பேதங்கள் செய்யாத கோவலரைத் தாவியேவெட்டி
தைரியம் தந்ததாரென்று கூறென உரைக்க
தேவியார் காற்சிலம்பது திருடியது இக்கதியாலே
கூவியே கொன்றிங்கு வாருங்கள் என்றேன்பெண்ணே
மாறியே பிழையொன்று நடந்தது என்றுணர்ந்து
கொடிய கனலாய் கண்ணினை சிவந்தகண்ணகை
ஆரையம்பதி கயலிசை தென்நாட்டுக் குலக்கொடியே.

7. சீறியே காற்சிலம்பதனை உடைத்து வீச
வீறியே நாகமணி பாண்டியராசனை வேகமாய்மோதிடவே
தேவியே தன்மீது தவறென்றே சிவலோகம்சேரவே
கண்ணகையும் நடந்து கொலைசெய்த தட்டானும்நீராக
சட்டென இடதுமுலை திருகியே எறிந்திடவே
சாம்பலாய் மதுரைநகர் பற்றியே எரிந்ததுவே
இட்டமுடன் ஆயர்பெண் பசுவெண்ணையள்ளி குளிர்ந்ததாயே
ஆரையம்பதி கயலிசை தென்நாட்டுக் குலக்கொடியே.

8. சிவந்த சிலம்பவள் கோபசாபம் தணிந்திடவே
மிக்கவரம் அருள்புரியும் சக்தியாய் பூச்சொரியும்

பதினாறு பேறாய் பேழையின் திருவருள்கூடி
தாய்வழிப் பரம்பரைக் குழந்தைகள் கழல்தொழும்
பக்தியில் பரவசம்காட்டும் வீரபத்தினி கண்ணகையே
ஏந்தியே துயரங்களை நீக்கி அருள்கின்றசூலி
சக்தியே சகலரும் போற்றுகின்ற சிலம்புக்காளி
ஆரையம்பதி கயலிசை தென்நாட்டுக் குலக்கொடியே.

9. மண்குடிசை களிமண்ணில் அமைந்த வீடு
மாளிகையாய் மாற்றிய காலத்தின் பேறு
மஞ்சம்தொடுவாய் தொட்டு காட்டுமாவடித் துறைசென்று
மட்டுநகர் வாவிபட்டு பவனிவரும் அன்னையின் மாட்சியே
பூச்சொரியும் பூக்களாய் மணம்வீசும் அன்புக்குசாட்சியே
கோவில் மணற்தரையில் குதித்தெழும் குழந்தைகளை
மகிழ்வாய் மடியில்புரண்டு அரவணைத்த காலத்தின்காட்சியே
ஆரையம்பதி கயலிசை தென்நாட்டுக் குலக்கொடியே.

10. புலவன் புகழ் ஓங்கப் பாடவைத்தாய்
அரவணைத்து மக்களை பக்தியில் கூட வைத்தாய்
அக்கினிசொரூப அற்புதகதிராய் எங்கும் சூழவைத்தாய்
அறியா பூஜைவிதியை நாவிலெழுதி திருவாக்கிட்டாய்
புதுமைபல ஊரெங்கும் பரவிக் குரவையிடவைத்தாய்
மந்திர ஓசையை உச்சாடனக் காவியமாக்கிவைத்தாய்
தண்டைஒலி முழங்கும் நாதஒலி கேட்டெழுந்துநின்றாய்
ஆரையம்பதி கயலிசை தென்நாட்டுக் குலக்கொடியே

11. சிலைவடிவோ கலைவடிவோ விழிகாணும் பேழைப்பேரொளியே
அருவுருவாகி மழலையாக தவழ்ந்தகுமரியே தெய்வத்தாயாகினலே
அம்மைதனை எப்பொழுது நினைத்தாலும்உள் நடமாடிடுவாள்
செம்மையுடன் சீர்பெற்று எம்மையெல்லாம்வாழ வைத்திடுவாள்
சந்நதிவாசல் திறக்கும்வேளை சந்தனவாசம் மணக்குதம்மா
உடுக்கைச் சத்தத்தோடு உள்ளம் குளிர்ந்தெழுந்து
வருகின்ற தேவதைகள் திருநடனமாடி அருள்வாக்கிடும்
ஆரையம்பதி கயலிசை தென்நாட்டுக் குலக்கொடியே




*சிராம்பியடி பிள்ளையார் : ஒத்துக்குடா கந்தன் வாவியால் வந்து இறங்கி கண்ணகை வழிபாட்டை தோற்றுவித்த இடம்*

*மண்முனை பத்திரகாளி : மண்முனை கண்ணகை வழிபாடு நடைபெற்றிருந்த இடம்*

*கோவில்குளம் நாகதம்பிரான் : அரசி உலகநாச்சி அம்மையார் அமைத்த சிகர கோபுரத்துடனான சிவன் கோயில் அமைந்திருந்த இடம்*




ஆரையம்பதி கண்ணகையம்மன் ஆலயத்தின் தோற்றம் - 2013




ஆரம்பநாள் அம்மனை அழைத்து வருதலும் கருதிநாள் திருகுளிர்த்தி காட்சி - 2013




ஆரையம்பதி கண்ணகை அம்பாள் ஆலயத்தின் முகப்பும் சுற்று மண்டபமும் - 2017





மண்முனை கண்ணகை அம்பாள் வழிபாடு நடைபெற்ற சூழலில் தற்போது அமைந்துள்ள பத்திரகாளி அம்பாள் ஆலயத்தின் தோற்றம் - 2017





ஒத்துக்குடா கந்தன் கண்ணகை வழிபாட்டை ஆரம்பித்த புதுக்குடியிருப்பு சிராம்பியடியில் அமைந்துள்ள பிள்ளையார் ஆலயம் - 2017





மஞ்சந்தொடுவாய் கண்ணகை அம்பாள் ஆலயம் - 2017

## தேடலில்...

ஈழத்தில் கிழக்கிலே தமிழர்களின் பெரிய ஊர் என வரையறுக்கத்தக்கவாறு 13 கிராம பிரிவுகளை தன்னுள் உள்ளடக்கிய கிராமம் - ஆரையம்பதி. இதன் கலாசார பண்பாட்டு விழுமியங்கள் பல தனித்துவம் வாய்ந்தவையாக அடையாளப்படும் போக்கில் இவ்வூரின் போற்றுதலுக்குரிய தெய்வமான கண்ணகையம்பாள் அமர்ந்திருக்கும் ஆலயமும் கிழக்கில் தனிச்சிறப்பு வாய்ந்தது. இறை நம்பிக்கைகளை பகுத்தறிவுடன் அணுகும் இன்றைய தலைமுறையினர் கூட, சித்தரை வருடப்பிறப்பு முடிந்த கையோடு பேசத்தொடங்கும் விடயம் "எப்ப சடங்கு தொடங்குது ........" என்பதாகும். அந்த அளவு வைகாசியில் இடம்பெறும் சடங்கு என்ற இந்த ஆலயத்தின் பெருவிழா ஒவ்வொருவரினதும் மனங்களில் வேரூன்றி இருப்பதை காணலாம்.

ஈழம் எங்கும் பரந்து இருக்கும் கண்ணகை வழிபாடுகள் சார்ந்த ஆய்வுகள் வெளிவந்திருந்தாலும் ஆரையம்பதி கண்ணகையின் வரலாறும் அதன் பண்பாட்டுக்கோலங்களும் முதன்முறையான நூலாக வெளிவருகின்றமை அம்பாளின் சித்தமே. இவ் கிராமத்தோடு பின்னிப்பிணைந்த முழுநம்பிக்கையான கண்ணகை அம்பாளின் வேரைத்தேடிய பயணத்தில் எம்மையும் ஈடுபடுத்திகொண்ட பெரும்பாக்கியத்தை நாமும் பெற்றுக்கொண்டோம் என்பதில் முழுத்திருப்தியடைகின்றோம். இந்நூல் ஆரையம்பதி கண்ணகை சார்ந்து பல தொன்மங்களை சுமந்து வந்திருப்பினும், அம்மனை ஆராதிக்கும் பத்தாதி பூசை முறைகள், இவ் ஆலயத்தில் இசைக்கப்படும் பறையிசை அதன் பாரம்பரியம் என்பவை உள்ளடங்கலாக ஆய்வு மற்றும் பதிவு செய்யப்பட வேண்டிய ஏராளமான விடயங்கள் இங்கு இன்னமும் மறைந்து காணப்படுகின்றன, அவற்றிக்கான தேடலையும் தொடர வேண்டிய தேவையும் இங்கு விரிகின்றது.

மட்டக்களப்பின் கண்ணகை வழிபாடு மற்றும் இலக்கிய ஆய்வுகளை மேற்கொள்ளவென தங்களை நிலை நிறுத்திய அமைப்புக்களும் ஆவலர்களும் ஆரையம்பதி என்ற பேரூரையும் அதற்கு ஓர் கலாச்சார குறியீடாக அமைந்திருக்கும் கண்ணகை அம்மன் கோயிலையும் தவிர்த்து பயணிப்பதில் உள்ள சூட்சுமத்தை இன்னமும் புரிந்துகொள்ள முடிவில்லை என்பதும், இங்கு கவலைதரும் செய்தியாகின்றது.

முதலில் இவ்நூலுக்கு ஆழமான அணிந்துரை வழங்கிய திரு. பாலசுகுமார் அவர்களுக்கும் மனமார வாழத்துரையை வழங்கிய திரு.அ.உமாமகேஸ்வரன் அவர்களுக்கும் மனமார்ந்த நன்றிகள். இவ் நூல் உருவாக்கத்திற்கான தேடலில் ஈடுபட்ட போது இந்நூலை தொகுத்தளிக்க முன்வந்த திரு.க.சபாரெத்தினம் அவர்களின் ஊக்கமும் ஈடுபாடும், இந் நூல் வெளிவர முழுநம்பிக்கைகள் தந்து நின்ற திரு.த.மலர்செல்வன் அவர்களும், தேடிச்சென்று கேட்ட போது இன்முகத்துடன் தங்களிடம் உள்ள தகவல்களை எம்மிடம் பகிர்ந்து கொண்ட பெரியவர்களுக்கும், குறிப்பாக முனாக்கான ஐயா, பாலுசோதிடர் ஐயா, பரம்சோதி பாக்கியராஜா அம்மணி அவர்களுடன், ஏனைய அனைத்துப் பெரியவர்கள்களும் அவர்கள் பகிர்ந்துகொண்ட தகவல்களும் ஊக்கத்துடன் மேலும் எம்மை ஆர்வமுடன் ஈடுபடசெய்தது. அத்துடன் தங்களிடம் கையெழுத்துப்பிரதியாக வைத்திருந்த காவியங்களை பாடல்களை தந்துதவிய பண்புநிறை பாலசுகுமார், கவிஞர் ஆரையூர் அருள், சக்திஸ்ரீ பரிபூரண முதலியார், தலைக்கோ முனாக்கானா, கவிக்கோ துரைவசந்தராசன், அம்பாள் அடியாள் சாந்தரூபி, கவிஞர் 'ம்சபாலன் ஆகியோருக்கும் எமது மனமார்ந்த நன்றிகள்.

எல்லாவற்றிக்கும் மேலாக இவ் கண்ணகை அம்பாளின் வரலாற்று நூல் ஒன்று வெளிவர வேண்டும் அம்பாள் சார் தொன்மங்கள் அனைத்தும் ஆவணமாக்கப்பட வேண்டும் என்ற முழு முயற்சியில் எம்மேடு கைகோர்த்து களஆய்வுகள் உள்ளடங்கலாகன அனைத்து செய்றபாட்டிலும் ஈடுபட்ட திரு.ச.ரகுதாஸ் மற்றும் திரு. சி.ரஞ்சித்குமார் அவர்களின் ஊக்கம் அவர்கள் ஊரின் மீது கொண்டுள்ள பற்று எனபனவும் இந் நூல் உருவாக்கத்திற்கான பெரும்பங்காகும்.

ஆரையம்பதி பிரதேசத்தின் மாற்றப்பட்ட, மறைக்கப்பட்ட தடங்களைத் தேடிய எமது பயணம் தொடரும்...

பிரசாத் சொக்கலிங்கம்
*www.arayampathy.lk*

**உசாத்துணை**


- 'ஆரையம்பதி கண்ணகை' கையெழுத்துப்பிரதி : திரு.பா.பொன்னையா, ஓய்வுபெற்ற கிராம உத்தியோகத்தர் (1999)
- ஆரைநகர் கண்ணகை வரலாறு : கையெழுத்துப்பிரதி : திரு. க. இராஜரெட்ணம்
- 'ஆரையம்பதி மண்-உள்ளதும் உரியதும்' : ஆரையம்பதி க.சபாரெத்தினம்(2013)
- 'ஆரையூர் கந்தன்' : ஸ்ரீ கந்தசுவாமி ஆலய கும்பாபிசேக மலர் (1999)
- 'பத்தினி வழிபாடு' : சி.கணபதிப்பிள்ளை (1978)
- 'மட்டக்களப்பு மாண்மீயம்' : வித்துவான் எ.எக்.சி நடராசா (1962)
- 'மயூரமங்களம்' : மயூராபதி அம்மன் கும்பாபிசேக சிறப்பு மலர் (2000)
- 'சிகரம்' : மண்முனைப்பற்று கலாச்சர சிறப்பு மலர் (2006)
- 'இலக்கிய நெஞ்சம்' : மு.கணபதிப்பிள்ளை 2002
- 'இறை இன்பப் பாவாரம்' ஆரையூர் அருள் (2016)
- 'கண்ணகி வழக்குரை' : வி.சி.கந்தையா (1968)
- 'வல்வெட்டித்துறை கடலோடிகள்' : கலாநிதி க.த செல்வராசாகோபால்
- திரு.த. பொன்னம்பலம் அவர்களின் அறிக்கை (1983)


மற்றும் தொகுப்பாசிரியர் க.சபாரெத்தினம் அவர்களின் சொந்த அறிவு மற்றும் அவர் அனுபவமும் முதியோர்கள் பலரிடம் இருந்து பெற்றுக்கொண்ட தகவல்களும்.

அத்துடன் அம்பாளின் விபரங்கள் அறிந்த பல கீழே பட்டியலிடப்பட்ட பெரியார்கள் தந்துதவிய தகவல்கள்

- Dr.வீ.ஞானசிங்கம், நம்பூதிரி. சித்த வழிக் கலைஞர்
- திருமதி. பரம்சோதி பாக்கியராசா (வயது 87) முன்னாள் அதிபர், வின்சன்ற் மகளிர் பாடசாலை, கணக்கப்பிள்ளை சின்னவாத்தியாரின் அவர்களின் பேத்தி
- கலாபூஷணம் மு.கணபதிப்பிள்ளை (வயது 94) முன்னாள் அதிபர்
- கலாபூஷணம் மூ.அருளம்பலம் (வயது 67) முன்னாள் அதிபர்
- கலாபூஷணம் சி.க.பொன்னம்பலம் (வயது 88) ஒய்வு பெற்ற நிர்வாக உத்தியோகத்தர்
- மூத்த எழுத்தாளர் சீ.ஆறுமுகம் - நவம் (வயது 89)

- கலாபூஷணம் க.செல்லத்தம்பி,(வயது 82) ஓய்வு பெற்ற கிராம உத்தியோகத்தர்
- கலாபூஷணம் ஐ.மகேசானந்தம் ,(வயது 82) ஓய்வுபெற்ற கூட்டுறவு உத்தியோகத்தர்
- கலாபூஷணம் காசுபதி நடராசா, ஓய்வு பெற்ற சன சமூக உத்தியோகத்தர்
- திரு.வாமதேவன், ஓய்வு பெற்ற கல்விப்பணிப்பாளர்
- சக்தி ஸ்ரீ பரிபூராணந்த முதலி, பிரதம பூசகர், மாரியம்மன் ஆலயம்
- திரு.மகேஸ்வரன், கட்டாடியார்
- திரு.கதிர்காமநாதன், பொன்னாச்சி குடி
- திரு.தட்சணாமுர்த்தி, உதவி கட்டாடியார்
- திரு. ஜெயந்தன் கிரான்குளம், அலகிபோடியாரின் பேரன்
- மண்முனை பத்திரகாளியம்மன் பரிபாலன சபை தலைவராக கடமையாற்றிய திரு.மார்க்கண்டு தர்மலிங்கம்
- மண்முனை பத்திரகாளி அம்பாள் கோயில் பூசகர் திரு.மகாலிங்கம் ஐயா
- மண்முனை பத்திரகாளி அம்பாள் பரிபாலனசபைப் பொருளாளராக கடமையாற்றிய திரு.எஸ்.தவராஜா
- திரு. கணபதிப்பிள்ளை செல்லத்தம்பி, (வயது 88) ஆரையம்பதி
- திரு.பாக்கியராசா செவ்வேள், வண்ணக்கர் ஏரம்பமூர்த்தி அவர்களின் பேரன்

ஆறாறு சமயங்க ளாயிருந் தாயே
அரனாரி டப்பாக மேயமர்ந் தாயே
வீறான மாங்கனிய தாயுதித் தாயே
வெற்றியுனை மன்னவன் விழிமறைத் தாயே
கூறான கோவலன் தனையுவந் தாயே
கூடல்மது ராபுரியை நீயெரித் தாயே
பேறான மண்முனையில் வாழவந் தாயே
வெட்டினுறு கந்தமல ரணையபெண் ணரசே

செங்கைதனில் மழுவேந்து சிவனாரு மிங்கே
திருமாலு டன்முனிவர் தேவர்களு மிங்கே
அங்கைதனில் வெண்கோ டெடுத்திசிவ னிங்கே
ஆறுமுகக் கடவுள்கண நாதரகளு மிங்கே
மங்கையுடை பூமாது நாமாது மிங்கே
மற்றுமுள நவகோண சத்திகளு மிங்கே
கங்கையுடை சூழ்மதுரை யெரிசெய்த பத்தினிக்
கண்ணகையு முறைகின்ற கயிலாய மிதுவே

- புலவர் நாகன்



ஆரையம்பதி

ISBN978-955-38041-0-5
9 789553 804105
விலை 300.00